Regd. No TN/MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone: 420212 | 6 பக்கம் விலை 40 காசு

**கலைப் புரட்சி**

எமது செயல் கலையைக் குலைப்பதல்ல. தக்க காரணங்களோடு கலையிலே புரட்சிதனை உண்டாக்க விழைகின்றோம்.



-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**பாடம்**

முதலாவதாக மாணவர்கள் ஆசிரியருக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். அடுத்து ஒழுங்குமுறை பழக வேண்டும். அதற்கு அடுத்தாற்போல் தான் பாடம்.

-தந்தை பெரியார்

மலர்: 6 | சென்னை 19 - 2 - 82 வெள்ளி | வெளியூர் 20 - 2 - 82 சனி | இதழ்: 121

★ 3874 புதிய வழித்தடங்களில் பஸ்கள் விட்டோம்
★ அதன் மூலம் 21424 பேருக்கு வேலை கொடுத்தோம்
★ நட்டம் வராதவாறு யோசித்து திட்டங்கள் தீட்டுகிறோம்
★ தி. மு. க. ஆட்சியில் அப்படியா திட்டம் தீட்டினார்கள்?

## கருணாநிதி ஆட்சியின் தாமதப் போக்கினால்

# மக்கள் பணம் 2,000 கோடி வீண்

## புரட்சித்தலைவர் வெளியிட்ட தகவல்

**சென்னை, பிப். 19- கருணாநிதி ஆட்சியின் தாமதமான நடவடிக்கைகளினால் மக்களின் வரிப்பணம் 2 ஆயிரம் கோடி ரூபாய் வீணாகி இருக்கிறது என்று மேலவையில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

மேலவையில் கவர்னர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது நடந்த விவாதங்களுக்குப்பதில் அளித்து நேற்று முதல்வர்புரட்சித்தலைவர் ஆற்றிய உரையின் பிற்பகுதி வருமாறு:—

அண்ணாவின் கொள்கைகளை தொடர்ந்து நிறைவேற்றி வருவதையே சாதனைஎன்று கருதுகிறவர்கள் நாங்கள் போக்குவரத்துத் துறையிலும் நாங்கள் பல்வேறு சாதனைகளை செய்துள்ளோம்,

3874 வழித்தடங்களில் பஸ்கள்விட்டுள்ளோம். அவற்றை விடுவது என்பது சிரமம் உள்ள பணிகள்.

அவை சுலபமானது என்றால் முன்பே அவர்கள் விட்டு இருக்கமாட்டார்களா?

76-77ல் புதிய வழித்தடங்கள் 60 தான். இப்போது 397.

புதிய வழித்தடங்களால் பயன் அடைந்த கிராமங்கள் அப்போது 152. இன்று 620.

இந்தச் சாதனைகள் எல்லாம் நாங்கள் செய்து இருக்கிறோம் என்றால் நட்டத்தில் செய்து இருக்கிறோம் என்று அல்ல. திருடிச் செய்யவில்லை. மக்கள் பணத்தை ஒழுங்காகச்செலவிட்டு இவற்றைச் செய்துள்ளோம்.

புதிய பேருந்துகளை விட்டதால் 21,424 பேருக்கு வேலை வாய்ப்புக்களைக் கொடுத்துள்ளோம். இதிலே ஓட்டுநர்கள் 7135, நடத்துநர்கள் 7147, தொழில்நுணுக்கத்தினர் 3568, மேற்பார்வை அலுவலர்கள் 3574.

ஆனால் யாருக்குமே வேலை வாய்ப்பு கொடுப்பதில்லை என்பது போலப்பேசுகிறார்கள்.

வேலை நிறுத்தம் கதவடைப்பு பற்றிக் கூறுகிறேன். 1979-ல் 331 வேலை நிறுத்தம். 1980-ல் 293—ஆனால் இப்போது 14 தான்.

நாங்கள் வேலை நிறுத்தம் நீடிக்க வேண்டும் என்றோ—கதவடைப்பு ஏற்பட வேண்டும் என்றோ நினைப்பவர்கள் அல்ல.

தொழிலாளர்கள் பிரச்னை இன்றி இருக்கவே விரும்புகிறோம், அதற்காக பாடுபடுகிறோம்.

நெசவாளர்களுக்கு பல்வேறு சலுகைகளைச் செய்துள்ளோம் 1979-ல் 5.56 லட்சம் கைத்தறியாளர்களில் 1.82 லட்சம் கைத்தறியாளர்கள் கூட்டுறவு சங்கத்தில் சேர்க்கப்பட்டனர். இது 32 சதவிகிதம் ஆகும். 1981ல் 2.81 லட்சம் நெசவாளர்கள் சேர்க்கப்பட்டனர். இது 51 சதவிகிதம்.

6-வது ஐந்தாண்டு திட்டத்தில் இதை 67 சதவிகித மாக்க திட்டமிட்டுள்ளோம்.

கைத்தறியாளர்கட்கு பாதுகாப்பு சட்டம் விரைவில் வரும்.

மீனவர் நலனுக்காக சலுகைகளைச் செய்துள்ளோம்.

மீனவர்கட்கு படகு, வலை சேதம் ஏற்பட்டால் பழுது பார்க்க ரூ. ஐநூறு கொடுக்கப்பட்டது.

புதிய படகு வாங்க பாதி கடனிலும், பாதி மானியமுமாகக் கொடுக்கிறார்கள். இந்தக்கடனை 2 ஆண்டில் திருப்பித்தர வேண்டும் என்பதை 3 ஆண்டுகளாக உயர்த்தியுள்ளோம்.

அரசு வழங்கும் மானியத்தை ஐம்பது சதவிகிதம் என்பதை எழுபத்தைந்து சதவிகிதமாக உயர்த்தி உள்ளோம்.

### தி.முக. ஆட்சியின் மெத்தனத்தால் ஏற்பட்ட நஷ்டம் பாரீர்!

பின்தங்கிய மாணவர்கட்கும், ஆதிதிராவிடர்கட்கும் தர்மபுரியில் ரூ. 14.85 லட்சத்தில் விடுதி கட்டப்பட்டுள்ளது. அங்கே 402 மாணவர்கள் தங்கலாம். தற்போது 354பேர் இருக்கிறார்கள். கிருஷ்ணகிரியில் உள்ள விடுதியில் 100 பேர் உள்ளனர்.

வேலைகள் தாமதமாக நடக்கிறது என்றார்கள்.

தி.மு.க. ஆட்சியில் திட்டமிட்டு பல ஆண்டுகள் கடந்தபிறகே வேலைகள் முடிவடைந்துள்ளன.

இதனால் திட்ட மதிப்பீடும் உயர்ந்துள்ளது. அதற்குச் சில உதாரணத்தைச் சொல்கிறேன்.

ஆளியாறு திட்டம் தீட்டப்பட்டது 1964-ல். திட்ட மதிப்பீடு ரூ. 11.50 லட்சம். ஆனால் வேலை முடிந்தது 1978-ல்.

இதற்கு ஆன செலவு ரூ. 25.50 லட்சம். இரண்டு மடங்குக்குமேல் ஆகி இருக்கிறது.

தர்மபுரி மாவட்டத்தில் பெண்ணாறு திட்டம்

(5-ம் பக்கம் பார்க்க)

★ கருணாநிதிக்கு முன்னும் பின்னும் 2 டி. எஸ். பி.கள், 8 இன்ஸ்பெக்டர், 16 சப்-இன்ஸ்பெக்டர் 200 போலீஸ்
★ ஊர்வல மத்தியில் உடுப்பணியாத போலீஸ்

**கருணாநிதியை கொல்ல வெடிகுண்டுஎன்ற**

★ கருணாநிதியைச் சுற்றி நின்று போலீசார் 'ரிங்ரவுண்டு' பாதுகாப்பு
★ குண்டுவெடித்தது 14-ந்தேதி-கருணாநிதி சென்றது 16-ந் தேதி
★ நரிகளை விரட்ட வைத்த வெடிகுண்டு தான் வெடித்தது

# தி.மு.க.வினர் புரளிக்கு டாக்டர் நாவலர் சாட்டை

## 'இந்திராவுக்கு தந்தது போன்ற பாதுகாப்புத் தர ஆணையிட்டவர் முதல்வர் புரட்சித்தலைவர்'

**சென்னை, பிப். 19- கருணாநிதியைக் கொல்ல வெடிகுண்டு வைக்கப்பட்டதாக தி.மு.க. வினர் கிளப்பிய புரளிக்குச் சாட்டையடி கொடுத்தும், கருணாநிதிக்கு அளிக்கப்பட்ட பாதுகாப்பு பற்றி விளக்கியும் தி.மு.கவினரின் நாடகத்தைஅம்பலப் படுத்தினார் டாக்டர் நாவலர்.**

கால்நடையாகப் போகும் கருணாநிதியைக் கொல்ல வெடிகுண்டு வைக்கப்பட்டதாக கூறப்பட்ட செய்தியை வைத்து சட்டசபையில் இன்று ஒரு ஒத்திவைப்பு தீர்மானம் கொடுக்கப்பட்டது.

அதன்மீதுரகுமான்கான் உமாநாத், அம்பிகாபதி, ஆகியோர் பேசினார்கள்.

இவற்றிற்குப் பதிலளித்து அவை முன்னவர் டாக்டர் நாவலர் கூறியதாவது:-

எதிர்க்கட்சித் தலைவர் மேற்கொள்ளும் நெடிய பயணத்தின் போது நடந்துள்ளதாகக் கூறப்படும் செய்தியை வைத்து-செய்தித்தாள்களில் வந்த செய்தியை வைத்து—ஒரு ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொடுத்திருக்கிறார்கள்.

இந்த அரசைப் பொறுத்தவரை எந்த அரசியல் கருத்தையும் அரசியல் ரீதியாகவே சந்திக்க வேண்டும். அவ்வாறு சந்தித்துப் பணியாற்ற வேண்டும் என்ற விருப்பம் கொண்டுள்ளது.

### பாதுகாப்பு தருவதில் முதல்வர் உறுதி

எதிர்க்கட்சித் தலைவருக்கு மட்டுமல்ல எந்த உறுப்பினருக்கானாலும் தகுந்த மதிப்பளிப்பதும் —அவர்கட்குப் பாதுகாப்பு அளிப்பதும் அரசின் கடமை என்று கருதுகிறோம்.

முதல்வர் புரட்சித் தலைவரைப் பொறுத்தவரை அனைவரையும் மதிக்கும் பண்புகொண்டவர்.

கருத்து வேறுபாடுகள் வருவது வேறு. ஆனால் அதற்காக அவர்களை மதிக்கும் தன்மை—அவர்கட்குப் பாதுகாப்பு அளிக்கும் தன்மை ஆகியவற்றில் முதல்வர் புரட்சித் தலைவர் உறுதியாக இருப்பவர்.

எதிர்க்கட்சித் தலைவர் நெடியபயணம் தொடங்கிய நாளிலிருந்து அதில் அசம்பாவிதம் ஏற்படாமல் இருக்கவேண்டும்என்பதற்காக பாதுகாப்பு ஏற்பாடுகளைத் தகுந்த முறையில் கவனிக்க உரிய ஆணைகளை முதல்வர் புரட்சித் தலைவர் பிறப்பித்தார்.

எதிர்க்கட்சித் தலைவர் போகும் வழியில் வெடிகுண்டுகிடந்ததாகமாலை முரசிலும், பிற பத்திரிகைகளிலும் செய்திகள் வந்திருக்கின்றன. அந்தச் செய்தியை முதல்வர் புரட்சித்தலைவர் பார்த்துள்ளார். அந்தச் செய்திகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்தன.

14-2-82ல் சிவகாசி செல்லும் சாலையில் வெள்ளைச்சாமி என்பவரின் மனைவி கருப்பாயி என்பவர் அந்த வெடிகுண்டைப் பார்த்தார்.

### நரிகளை விரட்ட...

**(அந்தப் பகுதிகளில் நரிகளை விரட்டுவதற்காக வைக்கப்பட்ட வெடி அது.)**

கருப்பாயி அம்மாளின் வலது கால் பட்டு அந்த வெடிகுண்டு வெடித்தது.

படுகாயமுற்ற கருப்பாயி சாத்தூர் மருத்துவமனையிலும், பிறகு மதுரை ராஜாஜி மருத்துவமனையிலும் சேர்க்கப்பட்டார்.

அவரது இரண்டு விரல்கள் துண்டாகி விட்டன.

இந்த சம்பவம் குறித்து வச்சக்காரன்பட்டி போலீசார் வழக்குப் பதிவு செய்துள்ளனர்,

**சம்பவம் நடந்தது 14ம் தேதி பகலில் ஆகும். ஆனால் எதிர்க்கட்சித்தலைவர் அந்தப் பகுதிக்கு வருவது 16ம் தேதிதான்.**

இதில் நூற்றுக்கணக்கானவர் காயமுற்றனர் என்பது தவறு.

வெடிகுண்டுவெடித்தது 14-ம் தேதி. அந்தப் பகுதிக்கு எதிர்க்கட்சித் தலைவர் வருவது 16-ம் தேதி. இந்த வெடிகுண்டு நிகழ்ச்சிக்கும்எதிர்க்கட்சித் தலைவர் கருணாநிதி பாதயாத்திரைப் பயணத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்பதாக தினமணியிலேயே செய்தி வந்துள்ளது.

ஆனால் சிவகாசியில் எதிர்க்கட்சித் தலைவர் கருணாநிதி ஒரு விடுதியில் தங்கி இருக்கும்போது வெளியே நின்று அடையாளம் தெரியாத ஒருவர் கூச்சல் போட்டுக் கொண்டு இருந்தார்.

அங்கே காவலுக்கு இருந்த போலீசார் அவரைப்பிடித்துவிசாரித்தனர்.

### ஆயுதம் இல்லை

அவர் பெயர் சுப்பிரமணியம் என்று தெரிய வந்துள்ளது.

மனநிலை சரியில்லாதவர். அவரிடம் எந்த ஆயுதமும் இல்லை. அவர் மீது வழக்கு பதிவு செய்யப்பட்டு புலன் விசாரணை நடந்து வருகிறது.

அவர் மதுரையிலுள்ள ராஜாஜி மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டு பரிசோதனை நடந்து வருகிறது.

எதிர்க்கட்சித் தலைவருக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்க அரசு ஏற்கனவே உத்திரவிட்டிருந்தது.

அதன்படி போலீஸ் சூபரின்டெண்ட் மேற்பார்வையில் நடைபயணத்தின் முன்பாக போலீஸ் டி. எஸ். பி. தலைமையில் 4 ஆய்வாளர்கள் 8 உதவி ஆய்வா

(2-ம் பக்கம் பார்க்க)

## மணமக்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அறிவுரை

# சேமிக்கும் பழக்கம் பெற்று சிறப்புடன் வாழ வேண்டும்

**சென்னை, பிப். 19-சேமிக்கும் பழக்கத்தைக் கைக்கொண்டு சிறப்புடன் வாழவேண்டும் என்று ராஜையா மகள் திருமணத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் மணமக்களுக்கு அறிவுரை கூறினார்.**

எம். ஜி. ஆர். பிக்சர்ஸ் மு.சு.ராசையாவின்மகள் முழுமதிக்கும், நாங்குனேரி சி. நடராசனின் மகன் என்.விஜயனுக்கும் நேற்று பிற்பகல் 3-30 மணிக்கு கோடம்பாக்கம் உயிர்த்தெழுந்த மீட்பர் ஆலயத்தில் திருமணம் நடந்தது.

பின்னர் இரவு 7 மணிக்கு தியாகராய நகரிலுள்ள பசும்பொன் தேவர் திருமணமண்டபத்தில் வரவேற்பு நடந்தது.

முதல்வர் புரட்சித் தலைவர், இராம. அரங்கண்ணல், புலவர் அறிவுடைநம்பி ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

திருமண வரவேற்புக்கு வந்த அனைவரையும் நடிகர் அசோகன் வரவேற்றார்.

பெரியவர் சங்கரையா, அலமேலு அப்பாதுரை, குஞ்சப்பன், தி. நகர் மூர்த்தி ஆகியோர் உள்பட திரளான கழகத் தோழர்கள் கலந்து கொண்டனர்.

மணமக்களை வாழ்த்திப்பேசுகையில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:—

இந்தத் திருமணம் எங்களதுகுடும்பத்திருமணம். இதற்கு இரண்டுகாரணம் இருக்கிறது.

ராஜய்யா அண்ணாவின் தம்பிகளில் ஒருவர் என்ற காரணம் ஒன்று.

அண்ணாவின் தம்பி எனக்கும் நெருங்கியவர் ஆவது மற்றொரு காரணம்.

இது எங்கள் குடும்பத் திருமணம் - நமது குடும்பத் திருமணம் என்று உரிமை பெற்றவர்களாக உள்ளோம்.

### விளம்பரமற்ற தொண்டு

இங்கே அரங்கண்ணல் பேசும்போது அவர்ஏதோ சொல்லிவிட்டு உட்கார்ந்து விட்டார். நான் இங்கே வரும்போது. தெளிவாகவும், குழப்பம் இல்லாத நிலையிலும் இருந்தேன். வந்த பிறகு அதற்கு மாறாக இருந்தது.

பல ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சிகள் பல, திரைப்படம் போல் என் நினைவில் ஓடுகிறது.

ராஜய்யா அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து செய்த தொண்டு — விளம்பரம் இல்லாமல் செய்த தியாகம், மறக்க முடியாதது.

யாரிடமும் எதற்கும் சென்று கேட்காமல், உழைத்து சம்பாதித்து, தன் காலில் நின்றுவாழும் வாழ்வுக்குசொந்தக்காரர் அவர்.

வருமானத்திற்கு ஏற்ப சிக்கனமாக செலவு செய்து குடும்பத்தை நடத்திச் செல்லும் பெருமை அவருக்கு உள்ளது.

ராஜய்யா எனது வீட்டிலே பழகுவது, என்னோடு பிறந்த தம்பியாக என்று சொல்லுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

அவர்கள் மத உரிமைப்படி இந்த திருமணத்தை நடத்தியிருக்கிறார்கள்.

இப்போது ஆசியைப் பெற்றுக் கொண்டிருக்கும் விஜயன் படித்தவர். முழுமதியும் ஓரளவுக்கு படித்தவர். இவர்களுக்கு புதிதாக சொல்ல என்ன இருக்கிறது?

### எளிமையாக வாழுங்கள்

அவர்களை எளிமையோடு வாழுங்கள், சிக்கனமாக வாழுங்கள், பிறர் புகழ வாழுங்கள் என்று வாழ்த்துகிறேன்.

இந்தத் திருமண வரவேற்பிற்கு நான் என் வாழ்க்கைத் துணைவியோடு வந்து வாழ்த்த வேண்டும் என்று எண்ணினேன்.

இன்னொரு (சட்டப் பேரவையில்) இடத்திலிருந்து நான் வந்ததால் உடன் அழைத்துவர முடியவில்லை.

இப்பொழுது மேலவையும் சட்டப்பேரவையும் நடந்துகொண்டிருக்கிறது.

இந்த வரவேற்பில் கலந்து கொண்டு வாழ்த்தும் பெயர் குறிப்பிட்ட அமைச்சர்கள் ஏன் வரவில்லை என்பதை நீங்கள் அனைவரும் புரிந்து கொள்வீர்கள்.

அவர்கள் அங்கே இருந்தாக வேண்டும். வாக்கெடுப்பு நடந்தால் அங்கேஇருந்துசட்டத்தை நிறைவேற்றியாக வேண்டும்.

இந்தசூழ்நிலையில்தான் தொல்லைகள் இல்லாத ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தை ஒன்றும் பெற்றுக் கொள்ளுங்கள் என்று மணமக்களை அரங்கண்ணல் கேட்டுக் கொண்டார்.

அறிவுடைநம்பி புதியதாக அறிமுகப்படுத்த வேண்டியவர் அல்லர். அவரது பேச்சு எட்டுதிக்கும் சென்று சேர்த்தது. அவரது வீட்டிலே தமிழ் கொஞ்சி விளையாடும். அப்படிப் பட்ட தமிழ் காப்பாற்றப் பட வேண் வேண்டும் என்று சொல்லுவதைவிட மற்றவர்களுக்கு பாதுகாப்பாக இருக்க தமிழைப் பாதுகாக்க வேண்டும்.

### சேமியுங்கள்

மணமக்களுக்கு ஒரு வேண்டுகோள். மாதம் ஒரு ரூபாயாவது நீங்கள் சேர்த்து வைக்க வேண்டும்.

பிறருக்கு பாரமில்லாமல் வாழ்பவர் தான் பெரிய தியாகி என்றார் அமரர் அண்ணா.

அந்த வகையிலும் தனக்குத் தெரிந்ததொழிலைச் செய்து எப்படி வருமானத்தை ஈட்ட வேண்டுமோ, அப்படிப் பெற்று வாழவேண்டியது ஒவ்வொருவரின் கடமையாகும்.

விஜயனும், முழுமதியும் வீட்டிலே இருந்து படித்து பல பட்டங்களை பெற்று தொழில் செய்து வளமானவாழ்வைப்பெற்றாக வேண்டும்.

நான் வணங்கும் தெய்வமான என் தாயின் ஆசி அவர்களுக்கு என்றும் இருக்கும்.

அவர்கள் மங்கள முகத்தோடும் மலர்ந்த வாழ்க்கையோடும் என்றும் இருக்கவேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

உங்களை நாடி மற்றவர்கள் வரும்படி உயர்ந்த நிலையில் நீங்கள் இருக்க வேண்டும்.

எப்போதும் உங்கள் முகம். மங்களகரமான முகங்களாக இருக்க வேண்டும். மற்றவர்கள் உங்களைக் கண்டு பெருமைப்படும் அளவும்—எல்லோரும் பின்பற்றவும் வாழுங்கள்.

என் வாழ்க்கைத் துணைவிவராவிட்டாலும் அவரது வாழ்த்தையும் இணைத்து வாழ்த்துகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

### அரங்கண்ணல்

மணமக்களை வாழ்த்திப் பேசுகையில் அரங்கண்ணல் கூறியதாவது:-

ராஜய்யாவின் திருமணம், திசையன்விளையில் நடந்தது. பேரறிஞர் அண்ணா தலைமை வகித்து அந்தத் திருமணத்தை நடத்தினார்.

அண்ணாவின் எண்ணங்களை வளர்க்கின்ற தலைவரின் (புரட்சித் தலைவர்) தலைமையில் ராஜய்யாவின் மூத்த மகள் முழுமதியின் திருமண வரவேற்பு நடக்கிறது.

இங்கே பேசிய அறிவுடைநம்பி தமிழில் எத்தனை சொல் உண்டோ அத்தனையையும் சொல்லி புரட்சித் தலைவரைக் குறிப்பிட்டார்.

புரட்சித் தலைவரைப் போல குழந்தை ஒன்று பெறுங்கள் போதும் என்றார் அவர்.

புரட்சித் தலைவரைப் போல நல்ல குழந்தை. அவர்களைப் போல தொல்லைகளை அனுபவிக்காத பிள்ளை ஒன்றையும் நல்ல செல்வியையும் பெறுங்கள்.

இவ்வாறு அரங்கண்ணல் பேசினார்.



20-ந் தேதி மாலை 53-வது வட்டத்தில்

### அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசுகிறார்

சென்னை, பிப். 19— சென்னை துறைமுகம் தொகுதி 53-வதுவட்டம் தாதாமுத்தியப்பன் தெருவில் நாளை மாலை கழகப் பொதுக்கூட்டம் எம்,ராமதாஸ் தலைமையிலும், கே.எல்லப்பன் முன்னிலையிலும் நடக்கிறது.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் சிறப்புரையாற்றுகிறார். ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, மதுசூதனன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கஜேந்திரபாபு, ஆனந்தன், மணி, பிள்ளைப் பாக்கம் மூர்த்தி, குமார், விஜயன், கருணாநிதி ஆகியோர் பேசுகிறார்கள்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

இருந்து வெளியேறினார்கள்.

### கழக அரசுக்கு உமாநாத் பாராட்டு

சென்னை, பிப். 19— எதிர்க்கட்சித் தலைவர் கருணாநிதி கால்நடையாகப் போகும் பாதையில் வெடிகுண்டு வைக்கப்பட்டதாக வந்த செய்தியைத் தொடர்ந்து சட்டசபையில் எதிர்க்கட்சியினர் அதுபற்றி விவாதிக்க ஒரு ஒத்திவைப்புத் தீர்மானம் கொடுத்து இருந்தார்கள்.

அரசு உடனே விதிமுறைகளை திருத்தி அதை விவாதத்திற்கு ஏற்றுக்கொண்டது.

உமாநாத் பேசும் போது இந்தப் பிரச்சினையைப்பற்றி ஒத்திவைப்புத் தீர்மானம் கொடுத்ததும் விதிமுறைகளைத் திருத்தி விவாதத்திற்கு ஏற்பாடு செய்த அரசை பாராட்டுகிறேன். எதிர்க்கட்சியினர் சொன்னதை உடனே ஏற்றுக்கொண்டீர்கள். இது ஒரு நல்ல ஏற்பாடு. இப்படிச் செய்தால் பிரச்னைகள் குறையும் என்று குறிப்பிட்டார்.

புதிய சட்ட முன் வடிவு

# பொதுசொத்துக்களை சேதப்படுத்தினால் 5 ஆண்டு வரை சிறை

## சேதத்திற்கு இழப்பீடும் வசூல் செய்ய வழி வகை

**சென்னை, பிப். 19-பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் விளைவிப்போருக்கு 6 மாதம் முதல் 5 ஆண்டுவரை சிறைத் தண்டனையும் சேதம் அளவுக்கு இழப்பீடு வசூலிக்கவும் வகைசெய்ய சட்ட முன்வடிவு தாக்கல் செய்யப்பட்டுள்ளது.**

சட்டசபையில் இன்று பொதுச்சொத்துக்களுக்கு சேதம் விளைவிப்போருக்கு தண்டனை விதிப்பதற்கான சட்ட முன்வடிவை சட்டசபையில் அமைச்சர் குழந்தைவேலு தாக்கல்செய்தார்.

பொது சொத்துகளுக்கு வேண்டும் என்று சேதம் உண்டாக்குபவர்கட்கு, தீவைத்து அல்லது வெடிவைத்து நாசம் செய்பவர்கட்கு 6 மாதங்கட்குக் குறையாமல் 5 ஆண்டுகள் வரை சிறைத் தண்டனையும், அபராத தண்டனையும் விதிக்க மசோதா வகை செய்கிறது.

மோட்டார் வண்டிகளில் பயணம்செய்வோர் மீது கல்லெறிந்தாலும், சோடா புட்டிகளை வீசினாலும், அவற்றை எறிய ஊக்குவித்தாலும், உடந்தையாக இருந்தாலும் மேற்கூறிய தண்டனை விதிக்க இந்த சட்ட முன்வடிவில் வகை செய்யப்பட்டுள்ளது.

இப்படிப்பட்ட குற்றங்களில் கைது செய்யப்பட்டவர் காவலில் வைக்கப்பட்டு இருந்தால் அவரை ஜாமீனில் விடுவிப்பதற்கான விண்ணப்பத்தை எதிர்க்க அரசு வழக்கறிஞருக்கு வாய்ப்பு அளித்தால் அன்றி அவரைவிடுவிக்கக் கூடாதுஎன்றும் உள்ளது.

### இழப்பீட்டு தொகை

வழக்குத் தொடர்வதற்கான செலவு, குற்றத்தால் ஒருவருக்கு ஏற்பட்ட இழப்பு அல்லது காயம், ஆகியவற்றுக்கு இழப்பீட்டுத் தொகை கொடுக்கப்படவேண்டும்.

சாலை- பாலம், கால்வாய் போன்றவற்றிற்கு சேதம் ஏற்படுத்தப்பட்டு இருந்தால் அவற்றைப்புதிதாக அமைப்பதற்குரிய செலவையும் கொடுக்க வேண்டும்.

இயந்திரங்களை நாசப்படுத்தி இருந்தால் அதைப் பழுது பார்க்க அல்லது புதிதாக வாங்க தண்டனைப் பெற்றவர் தொகை வழங்குவதற்கு நீதிமன்றம் உத்தரவிடுவதற்காக இச்சட்டம் வகை செய்கிறது.

இந்த சட்ட முன்வடிவு சபையில் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப் பட்டது.

## திருச்செந்தூர் அர்ச்சகர் தாக்கப்பட்ட சம்பவம்

# போலீசார் மீது அரசு எடுத்த நடவடிக்கைகள்

## மேலவையில் முதல்வர் விளக்கம்

**சென்னை, பிப். 19- திருச்செந்தூரில் அர்ச்சகர் ஒருவர் தாக்கப்பட்ட சம்பவம் குறித்து அரசு சார்பில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை முதல்வர் புரட்சித்தலைவர் மேலவையில் விளக்கினார்.**

போலீசார் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகளையும் முதல்வர் புரட்சித்தலைவர் அதில் குறிப்பிட்டார்.

திருச்செந்தூர் முருகன் கோவிலில் அர்ச்சகராக பணி செய்த அண்ணாவி என்ற முத்துராம சுப்பிரமணியம் என்பவர்காவல்துறையினரால் தாக்கப்பட்டதாக சட்ட மேலவையில் கவன ஈர்ப்பு தீர்மானம் கொண்டுவரப்பட்டது.

இந்தத்தீர்மானத்திற்கு பதிலளிக்கும் முறையில் முதல்வர் புரட்சித்தலைவர் ஒரு அறிக்கை தாக்கல் செய்தார். அதனை சட்ட அமைச்சர்பொன்னையன் சபையில் எடுத்துரைத்தார்.

அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ள தாவது:-

கடந்த ஜனவரி மாதம் 26-ம்தேதி இரவு 9 மணியளவில் நெல்லை நகரைச் சேர்ந்த பழனிச்சாமித்தேவர் என்பவர் சுப்பிரமணியசாமி கோவிலில் அர்ச்சகராக இருக்கும் அண்ணாவி என்கிற முத்துராம சுப்பிரமணியம் என்பவருடன் திருச்செந்தூர் காவல் நிலையத்திற்கு வந்தார். தான் கோவிலில் வழிபட்டுக் கொண்டிருக்கும் போது தன்னுடைய குழந்தையிடமிருந்து 11 கிராம் எடைகொண்ட தங்க நகையை அர்ச்சகர் அண்ணாவி கழற்றிவிட்டதாகத் தான் சந்தேகப்படுவதாக கூறினார். பழனிச்சாமித் தேவரை புகார் மனு கொடுக்கும்படி கேட்டுக் கொண்டபோது தன் நண்பர்களுடன் கலந்து ஆலோசித்து வருவதாக கூறிச் சென்று விட்டார்.

இது சம்பந்தமாக திருச்செந்தூர் காவல் நிலையத்தில் பொது பதிவேட்டில் குறிப்பு எழுதப்பட்டது. 28-ம் தேதி சுமார் இரவு 7 மணி அளவில் பழனிச்சாமித்தேவர் காவல் நிலையத்திற்கு மறுபடியும் வந்து அர்ச்சகர் அண்ணாவியின் மீது சந்தேகத் திருட்டுப்புகார் மனு ஒன்றை கொடுத்தார். அந்தப் புகாரில் அண்ணாவி தனது உறவினரிடமிருந்து நகை வாங்கித் தருவதாக கூறி தன்னுடன் (பழனிச்சாமிதேவருடன்) நெல்லைக்குவந்து இருந்ததாகவும் குறிப்பிட்டிருந்தார்

இது சம்பந்தமாக திருச்செந்தூர் காவல் நிலையத்தில் வழக்கு ஒன்றை உதவி ஆய்வாளர் பதிவு செய்து புலன் விசாரணை நடத்தினார்.

### வாக்குமூலம்

அன்று சுமார் இரவு 9-30 மணியளவில் திருச்செந்தூர் அரசு மருத்துவமனையிலிருந்து கிடைக்கப் பெற்ற தகவலின் பேரில் காவல் நிலைய தலைமைக் காவலர் மருத்துவமனைக்கு சென்று அங்கு அனுமதிக்கப்பட்டிருந்த அண்ணாவியிடமிருந்து வாக்குமூலம் பெற்றுக்கொண்டார்.

தான் நெல்லை நகரக் காவல் நிலைய காவலர். ஆசைத்தம்பி மற்றும் பழனிச்சாமித் தேவர் ஆகியோரால் தாக்கப்பட்டதாக அண்ணாவி கூறினார்.

காவலர் ஆசைத்தம்பி, புகார் மனுக் கொடுத்த பழனிச்சாமியின் உறவினர் என்று தெரிகிறது. ஆகவே திருச்செந்தூரில் இதன் காரணமாகப் பதிவு செய்யப்பட்ட வழக்கு நெல்லை வட்டார வருவாய் அதிகாரிக்கு விசாரணைக்கு அனுப்பப் பட்டது.

### தற்காலிக பணி நீக்கம்

இந்தவழக்கு தற்போது நெல்லை வட்ட வருவாய் அதிகாரியின் விசாரணையில் உள்ளது. திருநெல்வேலி நகரக் காவல் நிலையத்தைச் சேர்ந்த காவலர் ஆசைத்தம்பி 6-2-82-ம் தேதி முதல் தற்காலிகப் பணிநீக்கம் செய்யப்பட்டுள்ளார்.

திருச்செந்தூர் காவல் துறை ஆய்வாளர் குமாரபாண்டியன் நாகர் கோவிலுக்கும் துணை ஆய்வாளர் கிருஷ்ணசாமி பாளையங்கோட்டை கட்டுப்பாட்டு அறைக்கும் மாற்றப்பட்டுள்ளனர். தலைமைக் காவலர் பணவிடலை சத்திரத்திற்கு மாற்றப்பட்டுள்ளார்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் மேலவையில் தாக்கல் செய்த விபரஅறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மும்மொழி திட்டம் வராமல் இருக்க

# மாநிலப் பட்டியலில் கல்வி: தமிழகம் வலியுறுத்தல்

## அமைச்சர்அரங்கநாயகம் தகவல்

**சென்னை: பிப். 19-மீண்டும் மும்மொழித் திட்டம் தமிழகத்தில் வராமல் இருக்க கல்வி மாநிலப் பட்டியலிலேயே இருக்க வேண்டும் என்று தமிழகம் வலியுறுத்தி வருகிறது.**

சட்டசபையில் கேள்வி நேரத்தின் போது பதிலளித்து கல்வி அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது'—

இந்திய அரசியல் சட்டத்தின் 42-வது திருத்தத்துக்கு முன் கல்வி மாநில பட்டியலில் தான் இருந்து வந்தது. அந்த திருத்தத்தின்படி கல்வி பொதுப் பட்டியலுக்கு மாற்றப் பட்டது.

கல்வி மாநிலப்பட்டியலில் இருப்பது தான் பொருத்தமானதுஎன்பது தமிழக அரசின் கருத்து மட்டுமின்றி கல்வி வல்லுநர்களின் கருத்துமாகும்.

மாநில அரசின் இக்கருத்து உரிய கட்டங்களில் மைய அரசுக்கு வலியுறுத்தப்பட்டு வருவதோடு இந்த மாற்றத்தினை செய்வதன் இன்றியமையாமை குறித்த ஒரு பொதுவான கருத்து உருவாகவும் இந்த அரசு தன்னாலியன்ற முயற்சிகளை அவ்வப்போது மேற்கொண்டு வருகிறது.

கல்வி அமைச்சர்கள் மாநாட்டில் இது பற்றி எடுத்துக் கூறி கல்வி மாநிலப் பட்டியலில் தான் இருக்க வேண்டும். அப்போது தான் அந்தந்த மாநிலமக்களின் வாழ்க்கைமுறையையொட்டி அமையும் என்று எடுத்துக் கூறியிருக்கிறோம்.

### மும்மொழி திட்டம்: கழக அரசு ஏற்காது

தமிழகத்தின் இரு மொழி திட்டம் மிகச் சிறந்த திட்டம் என்று நடைமுறையில் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

அவர்கள் (மையஅரசு) பாட திட்டங்களை கொண்டு வந்தால் மும்மொழியைக் கொண்டு வரும் நிலை இருக்கிறது இதை தமிழக அரசு ஏற்காது. அதன் பிறகு தமிழகம் கொதித்தெழுந்து தவறான செய்கைகள் வந்துவிடக் கூடாது என்பதும் கல்வி மாநிலப்பட்டியலில் தான் இருக்க வேண்டும் என்பதும் தமிழக அரசின் எண்ணம்.

வெளி நாட்டிலுள்ள தமிழ் மாணவர்கள்இங்கு தமிழகத்தில் வந்து படிக்க டெல்லி தான் அனுமதிக்க வேண்டும்' அவர்கள் எப்படி ஒதுக்குகிறார்களோ அதன் படிதான் மாணவர்கள்சேர்க்கப்படுகிறார்கள், அந்த மாணவர்கள் தமிழகத்தில் வந்து படிக்க விரும்புவது தமிழககலாச்சாரத்தையும் கற்றுக் கொள்ளத்தான்.

வெளிநாட்டு மாணவர்கள்சேர்க்கும்பொறுப்பை பல்கலைக் கழகத்துக்கு தந்துவிட்டு அந்த மாணவர்கள் இந்தியாவுக்கு வரலாமா வேண்டாமா என்று விசா வழங்கும் பொறுப்பை மட்டும் மத்திய அரசு வைத்துக் கொண்டால்சரியாகஇருக்கும்.

மாநிலப் பட்டியலில் கல்வியைக் கொண்டுவர வேண்டும் என்ற முயற்சியில் தமிழக அரசு ஈடுபட்டிருக்கிறது.

உயர்கல்வியும் அறிவியல் ஆராய்ச்சியும் சட்டத் திருத்தத்திற்கு முன்பு மைய அரசிடம் இருந்தது. இப்போது கல்வியையும் சேர்த்து இருக்கிறார்கள். மாநிலங்களின் எதிர்ப்பை சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அரசியல் நிர்ணய சபையில் தமிழகத்தின் சார்பில் சென்ற டி. டி. கிருஷ்ணசாமி கல்வி மாநிலப் பட்டியலில் இருக்கவேண்டும் என்று சொல்லி இருக்கிறார்.

அதன்பிறகும் கல்வியை பொதுப்பட்டியலில் சேர்க்கவேண்டும் என்று சொல்லியிருப்பதற்கு நம் எதிர்ப்பை தெரிவித்திருக்கிறோம்.

கல்வியை பொதுப்பட்டியலில் சேர்க்கவேண்டும் என்று செய்திருக்கிறார்களே தவிர கல்விக்காக புதிதாக என்ன செய்யப் போகிறார்கள் என்று சொல்லவில்லை.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

சட்டசபை

### 26-ந்தேதி காலை கூடுகிறது

சென்னை, பிப். 19— சட்டசபை நடப்பு கூட்டத் தொடர் இன்றுடன் முடிந்தது. மீண்டும் சட்டசபை 26-ந்தேதி காலை 10 மணிக்கு கூடும் என்றும் அப்போது பட்ஜெட் தாக்கல் செய்யப்படும் எனவும் அறிவிக்கப்பட்டது.

### நாவலர் சாட்டை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ளர்கள் மற்றும் நூறு போலீஸ்காரர்கள் முன்பகுதியில் பாதுகாப்பு ஏற்பாடு செய்துகொண்டு போகிறார்கள்.

பின்பகுதியில் டி.எஸ்.பி தலைமையில் அதே அளவில் போலீசார் பாதுகாப்பாக சென்று கொண்டு இருக்கிறார்கள்.

ஊர்வலத்தின் மத்தியில் சீருடை அணியாத காவலர்கள் நிலைமையைக் கண்காணித்துக் கொண்டு செல்கிறார்கள்.

எதிர்க்கட்சித் தலைவரைச் சுற்றி ஒரு துணை ஆய்வாளர் தலைமையில் போலீஸ் காரர்கள் ''சூழ்ந்துநின்ற படி'' (ரிங்ரவுண்டு) பாதுகாப்புக் கொடுத்து வருகிறார்கள்.

### இந்திராவுக்கு தந்த பாதுகாப்பு போல...

13-2-82-ல் புறப்பட்ட எதிர்க்கட்சித் தலைவருக்கு இந்திரா காந்தி அம்மையார் பிரதமர் பதவி இல்லாமல் இருந்த பொழுது தமிழகத்திற்கு வந்த நேரத்தில் என்ன என்ன பாதுகாப்புக்கள் கொடுக்கப்பட்டனவோ அவற்றை எதிர்க்கட்சித் தலைவருக்கும் வழங்க தலைமைச் செயலாளர் மூலமாக உத்திரவிடப் பட்டுள்ளது.

எல்லாவிதப்பாதுகாப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

விடுதியில் பிடிபட்ட நபர்கூட கைது செய்யப்பட்டு மருத்துவ பரிசோதனை நடந்து வருகிறது. அவரை விட்டு விடவில்லை. விசாரணை தொடர்ந்து நடைபெறுகிறது.

எதிர்காலத்தில் எந்த விதமான அய்யப்பாடுகளும் ஏற்படாது இருக்கும் வகையில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

இப்போது அங்கே எந்தவிதப் பதட்டமும் இல்லை. வழிநடைப் பயணத்தைத்தொடர்ந்து மேற்கொள்கிறார் எதிர்க் கட்சித்தலைவர்.

கூட்டங்களும் நடக்கின்றன. போதிய பாதுகாப்பும்தரப்பட்டுள்ளது.

இவ்வாறு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

நாவலர் கூறிய விளக்கத்திற்கு பிறகு துணை சபாநாயகர் பி. எச். பாண்டியன் இந்த ஒத்திவைப்பு தீர்மானத்திற்கு அனுமதி மறுத்தார்.

இதைத் தொடர்ந்து தி.மு.க.வினர் சபையில்

(4-ம் பத்தி பார்க்க)

பிரதமர் இந்திரா கண்டனம்

# ஆள்வோர் மீது ஊழல் புகார் கூறுபவர்கள் ஊழல் பேர்வழிகளே

**புதுடெல்லி, பிப். 19-- இன்றைக்கு ஆள்பவர்கள் மீது ஊழல் புகார் கூறுகிறார்கள். அப்படிக் கூறுகிறவர்கள் யார்? அவர்கள் கடைந்தெடுத்த ஊழல் பேர்வழிகள் என்று பிரதமர் இந்திரா கூறினார்.**

பாராளுமன்ற இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்கள் கூட்டத்தில் பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறு கூறினார்.

அவர் மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

ஆளும் கட்சியினர் மீது ஏதாவது புகார் கூற வேண்டும், இதுவே அரசியல் என்று சில எதிர்க்கட்சிகள் கருதுகின்றன. அதனால் ஆளுகின்றவர்கள்மீது ஊழல்புகார்கள், லஞ்சப் புகார்கள் கூறுகிறார்கள். அப்படிக் கூறுகிறவர்கள் யார் என்று பார்க்கவேண்டும். அவர்கள் தான் கடைந்தெடுத்த ஊழல் பேர் வழிகள்.

ஜனதா ஆட்சிக்காலத்திலும் லோக்தளஆட்சிக் காலத்திலும்தான் ஊழல்கள் பெருகின. லஞ்ச ஊழல்கள் மலிந்தன. தங்களைப் போலவே மற்றவர்களும் இருப்பார்கள் என்று நினைத்துக் கொண்டு அவர்கள் நம் மீது ஊழல் புகார் கூறுகிறார்கள்.

ஊழல்களை ஒழிக்க வேண்டும். அந்த ஊழல் கீழ் மட்டத்தில் இருந்தாலும் உயர்ந்த மட்டத்தில் இருந்தாலும் ஒழிக்கப்பட வேண்டும். லஞ்சஊழல்கள் நிர்வாகத்தில் இருந்தாலும் அரசியலில் இருந்தாலும் ஒழிக்கப்பட வேண்டும். ஜனதா ஆட்சிக் காலத்திலும் லோக்தள ஆட்சிக்காலத்திலும் உருவாகி வளர்ந்த லஞ்ச ஊழல்களை ஒழிக்க தொடர்ந்து நடவடிக்கை எடுப்போம்.

## பத்திரிகை சுதந்திரம்

பத்திரிகை சுதந்திரம் பற்றிப் பேசுகிறார்கள். உண்மையில் இந்தியாவில் பத்திரிகைகளுக்கு இருக்கின்ற சுதந்திரம் போல் வேறு எந்த நாட்டிலும் இல்லை.

ஆனால் விடுதலைப் போராட்ட காலத்தில் தங்கள் பொறுப்புகளையும் கடமைகளையும் பத்திரிகைகள் உணர்ந்து செயல்பட்டன. ஆனால் இன்றைக்கு பத்திரிகைகள் எப்படி செயல்படுகின்றன என்று பார்க்க வேண்டும்.

அன்றைக்குப்பத்திரிகை சுதந்திரம் என்பது விடுதலைப் போராட்டத்தோடு இணைந்து இருந்தது. நாட்டின் விடுதலையோடு பத்திரிகை சுதந்தரத்திற்கும் சேர்ந்தே பாடுபட்டனர்.

ஆனால் இன்றைக்கு ஒரு செய்திக்கு ஆதாரம் இருக்கிறதா என்று கூட பார்க்காமல் தவறாகச் செய்தி போடுகிறார்கள். இதற்கு எத்தனையோ உதாரணங்களைக் கூற முடியும்.

விலைவாசி உயருகிறது என்கிறார்கள். உண்மையில் ஜனதா ஆட்சிக் காலத்தோடு ஒப்பிடுகையில்விலைவாசி குறைந்தே இருக்கிறது.

இவ்வாறு பிரதமர் இந்திரா கூறினார்.



## ஏ. கே. அரங்கநாதன் நிகழ்ச்சிகள்

குடிநீர் வடிகால் வாரியத்தலைவர் ஏ. கே. அரங்கநாதன்நிகழ்ச்சிகள்.

22-ந் தேதி காலை 10 மணி: பெரியார் மாவட்டத்தில் வாரியப்பணிகள் குறித்துஅலுவலர்களுடன் ஆய்வு நடத்துதல்.

23-ம் தேதி காலை 10 மணி: கோவை - நீலகிரி மாவட்டத்தில் வாரியப் பணிகள் குறித்து ஆய்வு நடத்துதல்.

24ம் தேதி காலை 10 மணிக்கு வடஆற்காடு மாவட்டத்தில் தன்னிறைவுத் திட்டக் குடிநீர் திட்டப் பணிகள் குறித்து கலந்துரையாடல்.

25ம் தேதி காலை 10 மணிக்கு மதுரை மாவட்டம் நிலக்கோட்டை தொகுதி நிகழ்ச்சிகள் குடிநீர்த் திட்டங்கள் குறித்து கலந்துரையாடல்.

26ம் தேதி காலை 10 மணிக்கு முகவை மாவட்டம் அருப்புக்கோட்டைத் தொகுதி நிகழ்ச்சிகள்.

மாலை 6 மணி பொது மக்கள் வரவேற்பு.

27ம் தேதி காலை 10 மணி: நெல்லை மாவட்டம் விளாத்திக்குளம் தொகுதி நிகழ்ச்சிகள்

28ம் தேதி காலை: அம்பாசமுத்திரம் தொகுதியில் வாகைக்குளம், மன்னார்கோவில் பிரம்மதேசம் கூட்டு குடிநீர் திட்ட திறப்பு விழா.

மாலை அம்பா சமுத்திரம் தொகுதி சிவந்திபுரம் குடிநீர்திட்டதிறப்பு விழா.

காவேரி பிரச்சினை

## டெல்லியில் ஏப்ரல் 3ந்தேதி பேச்சுவார்த்தை

திருவனந்தபுரம், பிப். 19- காவேரி நதிநீர் பிரச்சினை குறித்து கேரளம், கர்நாடகம், மற்றும் தமிழ்நாடு ஆகியமாநிலங்களுக்கு இடையேயான பேச்சுவார்த்தை ஏப்ரல் 3ந் தேதி டெல்லியில் நடக்கிறது.

இத்தகவலை கேரள முதலமைச்சர் கருணாகரன் தெரிவித்துள்ளார்.

## மரத்தில் ஏறியவர் விழுந்து மரணம்

சென்னை, பிப். 19— மாங்காய் பறிக்கமரத்தில் ஏறிய வாலிபர் ஒருவர் தவறி விழுந்து பரிதாபமாக மரணமடைந்தார்.

மரணமடைந்த வாலிபரின் பெயர் நாகராஜன். (வயது 25) சென்னையில் பத்திரிகை அலுவலகம் ஒன்றில் அச்சுக் கோர்ப்பவராக பணிபுரிந்தவர்.

## மறைவு

சென்னை, டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி 20-வது வட்ட செயலாளர் என். கண்ணாயிரத்தின் அண்ணியும், கே.பார்த்தசாரதியின் மனைவியுமான சாரதாம்பாள் கடந்த ஞாயிறு மறைவு எய்தினார்.

சென்னை மாவட்ட கழக துணை செயலாளர் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி வண்ணை க. சண்முகம். வட்டச் செயலாளர்கள் என். கண்ணாயிரம், ஏ. எம்.எஸ்.மணி, டி.சந்திரபாபு, நீலகண்டன், எஸ்.எம்.ராமலிங்கம் மற்றும் ஏ.கே.சாமி, எம். பாண்டியன், என். ஜெயராமன் ஆகியோர் உள்பட திரளான கழகத் தோழர்கள் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

மாணவர்கட்கு அமைச்சர் எஸ். டி. எஸ். வேண்டுகோள்

## நல்ல லட்சியங்களை கைக்கொண்டு படித்திடுவீர்

**சென்னை, பிப், 19-நல்ல கொள்கைகளே மனிதனை நல்வழிப்படுத்தும். மாணவர்கள் படிக்கும்போதே நல்ல கருத்துக்களை அறிந்து நல்ல கொள்கைகளைக் கடைப்பிடிக்க முன் வரவேண்டும் என்று அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.**

சென்னை நந்தனம் கலைக்கல்லூரியில் "பொருளாதார சங்கத், துவக்க விழா நடைபெற்றது. விழாவிற்கு விவேகானந்தா கல்லூரி முதல்வர் கே. கணேசன் தலைமை தாங்கினார். நந்தனம் கலைக் கல்லூரி முதல்வர் பி வி ராஜ்குமார் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.

விழாவில் சிறப்பு விருந்தினராக கலந்துகொண்டு பொருளாதார சங்கத்தை தொடங்கி வைத்து அமைச்சர் எஸ். டி. எஸ். உரை நிகழ்த்தினார்.

அமைச்சர் எஸ்.டி.எஸ் பேசுகையில் கூறியதாவது!

இக்கல்லூரியில் பொருளாதார சங்கத்தை துவக்கி வைப்பதில் பெருவுவகையும், மகிழச்சியும் கொள்கிறேன். எதிர்கால சமுதாயத்தின் நம்பிக்கை நட்சத்திரம் மாணவர் சமூகமே.

மாணவர்கள் கல்வி கற்கும் போது குறிக்கோளுடன்கல்விகற்கவேண்டும். கல்லூரியை விட்டு வெளியேறியவுடன் எந்தப்பணியில் ஈடுபட வேண்டும் என்பதைத் தீர்மானித்துக் கொண்டு படிக்கவேண்டும்.

### எண்ணிச் செயல்படுக

கல்விச்சாலைக்கு வந்தோம், போனோம் என்றில்லாமல் தங்கள் குடும்ப நிலையினையும், நாட்டின் நிலையினையும் எண்ணிச் செயல்பட வேண்டும், வறுமைக் கோட்டிற்கும் கீழாக உள்ள எத்தனையோ மாணவர்கள் இங்கிருக்கலாம். அவர்கள் தங்கள் பெற்றோர்கள் தங்களுக்காக படும் சிரமங்களை எண்ணிப் பார்த்து செயல்படவேண்டும்.

உலக அரசியலையும் கூட மாணவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும். கல்லூரிகளில் இன்று எதற்கெடுத்தாலும் போராட்டம் என்ற நிலை மாறவேண்டும்.

### விரும்பத் தகாதது

மாணவர்கள் தங்கள் குறைகளைஎடுத்துரைக்க வன்முறைச் செயல்களில் ஈடுபடுவதென்பது விரும்பத்தகாததும், ஏற்றுக்கொள்ள முடியாததுமாகும்.

நல்ல கொள்கைகளே மனிதனை நல்வழிப்படுத்தும், மாணவர்கள் நல்ல அறிவுரைகளையும், கருத்துக்களையும் கற்றுக்கொள்ளக்கூடிய பருவம் கல்லூரிப் பருவமே. எனவே கல்லூரிகளில் நல்ல கருத்துக்களைக் கற்றறிந்து நல்ல கொள்கைகளைக் கடைப்பிடித்துத் தங்களை நல்வழிப்படுத்திக் கொள்வதோடு சமுதாய மேம்பாட்டிற்கும் உறுதுணையாக இருக்கவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.,எஸ் பேசினார்.

## கழகத் தோழர் மரணம்

சென்னை, பிப். 19— சென்னை 111 வது வட்டம் நாவலர் நற்பணி மன்றத்தைச் சேர்ந்த விஜயன் காலமானார். செய்தி அறிந்தவுடன் வட்ட செயலாளர் தட்சிணாமூர்த்தி, ஆறுமுகம், வரதராசன், கருப்பையா, சிகாமணி, பாண்டியன், ஜார்ஜ் மற்றும் திரளான கழகத் தோழர்கள் அன்னாரது உடலுக்கு இறுதி அஞ்சலி செலுத்தினர். இறுதி ஊர்வலத்திலும் கலந்து கொண்டனர்.

# குண்டு வெடித்தது 14-ந்தேதி
# கருணாநிதி போனது 17-ந்தேதி
# வெடிகுண்டு பிரச்னை: தி.மு.க.கும்பல் நடத்தும் பித்தலாட்ட நாடகம்

**மதுரை, பிப். 19- விருதுநகர் சாத்தூர் சாலையில் நாட்டு வெடிகுண்டு கிடந்ததற்கும் கருணாநிதியின் கால்நடைப் பயணத்திற்கும் எந்தவிதசம்பந்தமும் இல்லை.**

தி. மு. கழகத்தினர் சாத்தூர் சாலையில் இன்னொரு 'குடமுருட்டி'யை கண்டுபிடிக்க நினைத்து ஏமாந்தனர்.

திருச்செந்தூருக்குக்கும் கால் நடை பயணம் போகும் கருணாநிதி ஒவ்வொரு நாள் இரவும் காரில் பறந்து எங்கே குளுகுளு அறை இருக்கிறது என்று தேடித்தங்குகிறார். முதல் இரண்டு தினங்கள் இரவில் அவர் மதுரைக்கு வந்து குளுகுளு ஓட்டலில் தங்கினார்.

மூன்றாம் நாள் கள்ளிக்குடியிலிருந்து காரில் பறந்து வந்து திருமங்கலத்தில் தனியார் இல்லத்தில் குளுகுளு அறையில் தூங்கினார். மறுநாள் கள்ளிக்குடிக்குக் காரில் பறந்து சென்று அங்கிருந்து கால்நடைப் பயணம் துவக்கினார்.

நான்காம் நாளான நேற்று அவர் கால்நடைப் பயணம் பாதையிலிருந்து விலகி குளுகுளு அறை தேடி சிவகாசிக்குக் காரில் பறந்து சென்றார். சாத்தூரிலிருந்து சிவகாசி 12 மைல் தூரம். சாத்தூரிலிருந்து அவர் சிவகாசிக்கு குளுகுளு காரில் சென்று குளுகுளு அறையில் தூங்கினார். ஐந்தாம் நாளாக அவர் கோவில்பட்டியில் தங்குவதற்கு குளுகுளு அறை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இப்படிகருணாநிதி குளுகுளு அறைகளில் தூங்கி கால்நடைப்பயணம்செய்து வரும்போது அவர்சென்ற பாதையில் வெடிகுண்டு வைக்கப்பட்டதாக தி.மு. கழகத்தினர் ஒரு புரளியைக் கிளப்பிவிட்டனர். பிரச்சாரத்திற்காகக் கிளப்பிவிடப்பட்ட அந்த புரளிகுடமுருட்டிக்குண்டு போல் புஷ்வாணமாகி விட்டது.

யுடன் கால்நடையாக வந்த தொண்டர்களில் ஒரு பகுதியினர் சாத்தூருக்குப் போய்விட்டனர். இம்மாதம் 14-ம் தேதி வெடிகுண்டு வெடித்த சாலை வழியாகத்தான் இவர்களும் போனார்கள்.

அதன் பின்னர் மாலை 5-30 மணிக்கு மிச்சமீதம் இருந்த தொண்டர்களுடன் கருணாநிதி சாத்தூருக்குநடந்துபோனார். அன்று அந்தச் சாலையில் எந்த இடத்திலும் எந்தக் குண்டும் வெடிக்கவில்லை.

சிவகாசி மூன்று நட்சத்திர ஓட்டலில் தங்கி கருணாநிதி இட்டுக்கட்டிய இன்னொரு குடமுருட்டிக் குண்டும் அவருக்குக் கை கொடுக்காதது தி.மு. கழகத்தினரை சோர்வடைய வைத்திருக்கிறது.

## பொய் அம்பலம்

நடந்தது என்ன என்பதனை ''தினமணி'' உட்பட எல்லா ஏடுகளும் செய்தி வெளியிட்டிருக்கின்றன. விருதுநகர், சாத்தூர் சாலையில் வெடிகுண்டுகிடந்ததற்கும் கருணாநிதியுன் கால்நடைப் பயணத்திற்கும் துளி அளவு கூட சம்பந்தம் இல்லை என்பதனை அத்தனை ஏடுகளும் அம்பலப்படுத்தியிருக்கின்றன.

விருதுநகர் — சாத்தூர் சாலையில் வெடிகுண்டு கிடந்தது இம்மாதம்14ந் தேதி.கருணாநிதி அந்தப் பாதை வழியாகச் சென்றது இம்மாதம் 17-ந் தேதி.

## நடந்தது என்ன?

துலுக்கப்பட்டியை அடுத்துள்ள ஆவுடையாபுரத்தைச் சேர்ந்த சலவைத் தொழிலாளர் வெள்ளச்சாமியின் மனைவி கருப்பாயி. (வயது 50) இவர் கடந்த 14-ம் தேதி துலுக்கப்பட்டிக்கு வந்தார். அங்கு அழுக்குத் துணிகளை எடுத்துக் கொண்டு மாலை 3-30 மணிக்கு ஆவுடையார்புரம் சாலையில் சென்றார். சாலையின் ஓரத்தில் நீல நிற துணிப் பொட்டலம் கிடந்தது.

அந்தப் பொட்டலத்தில் என்ன இருக்கிறது என்று அறிவதற்கு காலில் எத்தினார். பொட்டலம் வெடித்ததுகருப்பாயியின் இரண்டு விரல்கள் துண்டாகிவிட்டன. கருப்பாயி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்றுவருகிறார்.

இந்தச்சம்பவம் நடந்தது இம்மாதம் 14-ம் தேதி.மாலை 3.30 மணி.

ஆனால் கருணாநிதி சம்பவம் நடந்தஇடத்தை எப்போது கடந்தார்?

இம்மாதம் 17-ம் தேதி மதியம்சிவகாசியில்உள்ள மூன்று நட்சத்திர ஓட்டலான கிருஷ்ணாவில் குளுகுளு அறையில் தங்கியிருந்தார்.

அங்கிருந்து மாலை5-30 மணிக்கு குளுகுளு காரில் துலுக்கப்பட்டிக்கு வந்தார்.

## குண்டு எதுவும் வெடிக்கவில்லை

துலுக்கப்பட்டியில் தங்குவதற்கு இடவசதி இல்லாததால் கருணாநிதி

---

## டெல்லி மேல்சபை துணைத் தலைவராக ராமகிருஷ்ணன்

சென்னை, பிப். 19— மாநிலங்களவை (ராஜ்ய சபை)யின் துணைத் தலைவர்களில் ஒருவராக அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக உறுப்பினர் ஆர். ராமகிருஷ்ணன் தேர்ந்தெடுக்கப்பட்டார். சபையின் தலைவராக குடியரசு துணைத்தலைவர் இதயதுல்லா இருக்கிறார். இவர் சபையில் இல்லாதபோது துணைத் தலைவர் சபைக்கு தலைமை வகித்து நடத்த வேண்டும். அப்படி சபையை நடத்தும் துணைத் தலைவர்களில் ஒருவராக ஆர்.ராமகிருஷ்ணன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மாநிலங்களவையின் துணைத் தலைவர்களில் ராமகிருஷ்ணன் தான் வயதில் குறைந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

---

சங்கரன் கோவிலில்

## அமைச்சர் காளிமுத்து பேசுகிறார்

நெல்லை, பிப். 19— சங்கரன்கோவில்காந்தி மண்டபத்தில் இம்மாதம் 22ந்தேதி இரவு அமைச்சர்காளிமுத்துபேசுகிறார்.

கூட்டத்திற்கு மு. திருமலை தலைமை வகிப்பார்.

சட்டமன்ற உறுப்பினர் கள்வி, கருப்புசாமிபாண்டியன் ஆர்.கே. பெருமாள், பி. துரைசாமி மற்றும் கழகத் தோழர்கள் பேசுகிறார்கள்.

## நீரோட்டம் அடியார் நிகழ்ச்சிகள்

பிப்ரவரி 21- திருநெல்வேலி
22- சங்கரன் கோயில்
23- திருநெல்வேலி
24,25-திருவில்லிபுத்தூர்

---

## நடமாடும் நீதிமன்றம்: அரசு பரிசீலிப்பதாக முதல்வர் தகவல்

**சென்னை, பிப். 19- மீண்டும் நடமாடும் நீதிமன்றங்கள் அமைக்கலாமா என்பது குறித்து அரசு பரிசீலிதது வருவதாக முதல்வர் புரட்சித்தலைவர் சட்டமன்ற மேலவையில் தெரிவித்தார்.**

சட்டமன்ற மேலவையில், கேள்வி நேரத்தின் போது அனகாபுத்தூர் ராமலிங்கம் பக்கிங்காம் கால்வாய் படகு விடும் திட்டம் பற்றி பரிசீலிக்கப் படுமா'' என்று கேட்டார் அதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் பதில் அளிக்கையில் ''உறுப்பினர் விரும்பினால் காகிதத்தில் படகு செய்து விட்டு தனது ஆசையைத் தீர்த்துக் கொள்ளலாம்'' என்ற போது சபையில் பலத்த சிரிப்பு எழுந்தது.

வுப் பேருந்து தவிர மற்றவைகள் பற்றி சிந்திக்கலாம்'' என்று கூறினார்.

எதிர்கட்சித் தலைவர் சங்கரலிங்கம் கேள்விக்குப் பதிலளிக்கையில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:-

சாலைப்போக்குவரத்து விதிமுறைகளை மீறுபவர்கள் மீது உடனுக்குடன் நடவடிக்கை எடுத்து உடனே தண்டனை வழங்குவதற்காக மீண்டும் நடமாடும் நீதிமன்றம் அமைக்கலாமா என்பது குறித்து அரசு ஆலோசித்து வருகிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

## வேகக் கட்டுப்பாடு கருவி

எல்லா வாகனங்களுக்கும் விரைவுக் கட்டுப்பாடு கருவி பொருத்தப்பட்டு. மீறுபவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுமா என்ற கேள்விக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பதிலளிக்கையில் ''விரை

## வேகத் தடை

முக்கிய சாலைகளில் வேகத்தைதடுக்கும் தடை கட்டைகள் அமைக்கப் படுமா என்ற லட்சுமி காந்தன் கேள்விக்குப் பதிலளித்துமுதல்வர் புரட்சித் தலைவர் கூறுகையில் ''சில சமயங்களில் மருத்துவமனைக்கு நோயாளிகளை எடுத்துக்கொண்டு அவசரமாகச் செல்ல வேண்டியிருக்கும், நீதிமன்றங்களுக்குச் செல்ல வேண்டிய கடமையில் சிலர் வேகமாகச் செல்ல நேரிடலாம். எனவே விபத்து அதிகம் நடக்கும் இடங்களில் தேவைக்கேற்ப வேகத்தடைகள் அமைப்பது பற்றி பரிசீலிக்கலாம்'' என்று குறிப்பிட்டார்.

விபத்து தடுப்பு பற்றிய மற்றொரு கேள்விக்கு முதல்வர் பதிலளிக்கையில் ''சாலையிலுள்ள மஞ்சள் கோட்டை அனுசரித்து வாகனங்களை ஓட்டினால் விபத்துக்கள் குறையும்'' என்றார்.

---

விவசாய பம்பு செட்டுகளுக்கு மின்சாரம்:

## புரட்சித் தலைவர் விசேஷ உத்தரவு

சென்னை, பிப். 19— சட்டசபையில் கழக உறுப்பினர் வேடசந்தூர் வி. பி. பாலசுப்பிரமணியன் கேட்ட கேள்விக்கு பதிலளித்து அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது,-

தமிழகத்தில் விவசாயிகளின் பம்புசெட்டுகளுக்கு மின் இணைப்பு கொடுப்பது அவர்களின் விண்ணப்பத் தேதியின் அடிப்படையில் கொடுக்கப்படுகிறது.

31-3-76-ம் ஆண்டுக்கு முன்பு மனு போட்டவர்கள் 48 ஆயிரத்து 215 பேர் இருக்கிறார்கள்.

தீவிர திட்டத்தின் அடிப்படையில் வரும் ஆண்டில் அவர்களுக்கு மின்இணைப்புதரப்படும்.

மின்வாரியத்தின் மூலம் கடிதம் அனுப்பப் பட்டு, தயார் நிலையில் உள்ள விவசாயிகளுக்கு மின் இணைப்பு அளிப்பதற்கு முதல்வர் விசேஷஉத்தரவிட்டுள்ளார்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

---

## புதிய வரி எதையும் தமிழக அரசு விதிக்கவில்லை

### அமைச்சர் எஸ். டி. எஸ். பெருமிதம்

**சென்னை, பிப். 19-தமிழக அரசுபுதியவரி எதையும் விதிக்கவில்லை. பொது விற்பனை வரி சட்டத்தைத் திருத்தி சில மாற்றங்களுடன் தற்போது கொண்டு வந்திருக்கிறது என்று வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்,**

தமிழ்நாடு 1981—ஆம் ஆண்டு பொது விற்பனை வரி (மூன்றாவது திருத்த) சட்ட முன்வடிவை அமைச்சர் எஸ். டி. எஸ், சட்டப்பேரவையில் தாக்கல் செய்தார்.

அதன் மீதான விவாதத்தில் உறுப்பினர்கள் பேசிய கருத்துக்களுக்கு அமைச்சர் எஸ். டி. எஸ், பதிலளித்தார்.

அப்போது அவர் கூறிய கூறியதாவது:-

இந்த நாட்டு குடிமக்கள் அனைவரும் மரியாதையுடனும் மதிப்புடனும் நடத்தப்பட வேண்டும் என்பதில் யாருக்கும் மாறுபட்ட கருத்தில்லை. பல நிறுவனங்கள் ஒரு முனை வரி வேண்டாம் பல முனை வரி வேண்டும் என்று கோரிக்கை விடுத்திருக்கின்றன.

### வரியைக் குறைத்தோம்

தமிழ்க அரசு புதிய வரி எதையும் விதிக்கவில்லை. மக்களுக்கு பயன்படும் வகையில் விற்பனை வரியை சில மாற்றங்களுடன் திருத்தம் செய்து கொண்டு வந்திருக்கிறது. பள்ளி மாணவர்கள் உபயோகிக்கும் எல்லாப் பொருள்கள் மீதான வரியையும் அரசு ரத்து செய்துள்ளது. மோட்டார் என் ஜின் பொருத்தப்பட்ட சைக்கிள் ரிக்ஷாக்களுக்கு முன்பு இருந்த 6 சதவிகித வரியை 3 சதவிகிதமாக குறைத்து இருக்கிறோம். புதிதாக எதற்கும் வரி போடவில்லை. வரிப் பணத்தை சிந்தாமல்சிதையாமல் கருவூலங்களில் சேர்த்து அதைச் சிக்கனமாக செலவு செய்வதில் இந்த அரசு கண்ணுங் கருத்துமாய் இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார். பின்னர் மசோதா பேரவையில் சட்டமாக நிறைவேறியது.

---

பஞ்சாப் இ. காங்கிரஸ் தலைவர்

## திடீர் நீக்கம்: பிரதமர் இந்திராகாந்தி நடவடிக்கை

புதுடெல்லி, பிப். 19- பஞ்சாப் மாநில இந்திரா காங்கிரஸ் தலைவராக இருந்தவர் செல்வி சரளா பிரசார்.

பிரதமர் இந்திராகாந்தி சரளாவை நீக்கிவிட்டு அந்த இடத்தில் ஹன்ஸ்ராஜ் சர்மாவை நியமித்துள்ளார். ஹன்ஸ்ராஜ் சர்மா சஞ்சய்காந்தியின் கொள்கையை கடுமையாக விமர்சித்தவர் ஆவார்.

இதையடுத்து 1980-ம் ஆண்டுத் தேர்தலில் இவருக்கு கட்சி டிக்கெட் தரப்படவில்லை. இதன் பிறகு அரசியலிலிருந்து இவர் ஒதுங்கியிருந்தார். தற்போது இவருக்கு பிரதமர் இந்திரா பதவி அளித்துள்ளார்.

## பிச்சை உடல்நிலை: கழகத்தினர் பார்த்தனர்

தி. மு. க. காலிகளால் கத்திக்குத்துப் பட்டு மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவரும் பிச்சையை மாநிலங்களவை உறுப்பினர் பொ. அன்பழகன், சட்டமன்ற உறுப்பினர் பாலுசாமி, மதுரைநகர் மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத்துணைச் செயலாளர் இளவரசன், பரமன் மதுரை சுந்தரம், முகவை முத்துராமன் நாகராசன் ஆகியோர் சென்று பார்த்து உடல் நலம் விசாரித்தனர்,

---

சென்னை வந்த மத்திய பாதுகாப்புத்துறை அமைச்சரும், பாரதியார் நூற்றாண்டு விழா புரவலருமான ஆர். வெங்கட்ராமனை தமிழக செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர்.எம். வீ. சந்தித்து டெல்லியிலும், வெளிநாடுகளிலும் பாரதியார் நூற்றாண்டு விழா கொண்டாடுவது குறித்து பேசினார்.

---

## கோவில்-ஆஸ்பத்திரி-கல்வி நிறுவனங்கட்கு மின் கட்டண சலுகை

### அரசு ஆலோசிப்பதாக அமைச்சர் பண்ருட்டி தகவல்

**சென்னை, பிப். 19— கோவில்கள், மருத்துவ மனைகள் மற்றும் கல்வி நிறுவனங் களுக்கு மின் கட்டண சலுகை அளிப்பது குறித்து அரசு ஆலோசித்து வருவதாக அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.**

சட்ட மேலவையில் தமிழகத்தில் உள்ள கோவில்களுக்குவியாபார நிலையங்கள் போன்று மின்சாரகட்டணம் வசூல் செய்ய மின்சார வாரியம் உத்தரவு பிறப்பித்துள்ளது பற்றிய கேள்வி ஒன்றுக்கு மின்சாரதுறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பதிலளிக்கையில் கூறியதாவது:—

வியாபாரநிலையங்களில் மின்சாரக் கட்டணம் வசூலிப்பது போல் கோவில்களிலும் வசூலிக்க மின்சார வாரியம் உத்தரவு பிறப்பித்துள்ளது.

இந்த உத்தரவால் கோவில்களில் நிதி நெருக்கடி ஏற்படும். வருவாய் குறையும். என கோவில் அதிகாரிகள் மற்றபொது மக்கள் மனு அனுப்பியுள்ளார்கள். கோவில்களுக்கு சலுகை டிப்படையில் மின் ட்டணம் வசூலிக்க வேண்டும் என்ற கோரிக்கையை வலியுறுத்தி

அறநிலைய துறையினரும் மின் வாரியத்திற்கு மனு கொடுத்திருக் கிறார்கள்.

### கூடி வாழ்ந்தால் கோடி நன்மை

பொதுமக்கள் ஒன்றாகக் கூடி நடத்தும் பொது அமைப்புகள் எப்போதும் வெற்றிகரமாகவேசெயல்படுகிறது, அதனால் மக்களும் பயனடைகிறார்கள். ஆகவே கோவில்கள் மட்டுமல்ல, கல்விநிலையங்கள் மருத்துவமனைகள் பகுத்தறிவு அமைப்புகள் பொது நோக்குடன் செயல்படும் நிறுவனங்கள் ஆகியவற்றுக்கு சலுகையான கட்டணத்தில், மின்சாரம் வழங்குவது குறித்து, அரசு பரிசீலித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

---

## நல்லான் குப்பத்தில் கழகக் கூட்டம்

சென்னை, பிப். 19— சென்னை 115 வது வட்டம், நல்லான் குப்பம் அருகிலுள்ள நாயக்கமார் தெருவில் நாளை (20-ந் தேதி) மாலை 7 மணிக்கு காதிகதர் வாரிய உறுப்பினர் சைதை தமிழ்ச் செல்வனுக்குப் பாராட்டு விழாவும், கழகப் பொதுக்கூட்டமும் நடக்கிறது.

எஸ். எஸ். ராஜேந்திரன் தலைமையிலும் வட்டச் செயலாளர் அ. கோலாஸ் முன்னிலையிலும் நடக்கும் இந்தக் கூட்டத்தில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் திருப்பூர் மணிமாறன் எம்.எல்.ஏ. காடுவெட்டி கண்ணப்பன் எம்.எல்.சி, சென்னை மாவட்ட துணைச் செயலாளர் கு.க. செல்வம் பா. வளர்மதி, தி. நகர் மூர்த்தி. நா. ரா. தாளமுத்து, வி. கு. சச்சிதானந்தம், செல்லன் மணி, பி. கந்தசாமி, செல்வராஜ், பொன். ராமச்சந்திரன் ஆகியோர் பேசுகின்றனர்.

---

## ரெயில்வே சீசன் டிக்கெட்-2-ம்வகுப்பு கட்டணம் உயருகிறது

புதுடெல்லி, பிப். 19— வரவிருக்கும் ரெயில்வே பட்ஜெட்டில் ரெயில்வே சீசன் டிக்கட் கட்டணமும், 2.வது வகுப்பு கட்டணமும் உயர்த்தப்படும் எனக் கூறப்படுகிறது.

அடுத்த வார ஆரம்பத்தில் ரெயில்வே பட்ஜெட் தாக்கல் செய்யப்படுகிறது.

இந்த ரெயில் கட்டணங்களை உயர்த்த ரெயில்வே கட்டண விசாரணைக் கமிட்டி சிபார்சு தெரிவித்துள்ளது.

கடந்த ஆண்டு பட்ஜெட்டில் சீசன் டிக்கெட் கட்டணங்கள் உயர்த்தப்படவில்லை.

ரெயில்வே அமைச்சர் பி.சி.சேத்தி ரெயில்வே பட்ஜெட்டிற்கு இறுதி வடிவம் கொடுப்பதில் தீவிரமாக ஈடுபட்டுள்ளார்.

---

அக்ரோ தலைவர்

## லியாகத்-அலிகான் பங்கேற்ற நிகழ்ச்சிகள்

சென்னை, பிப். 19— சென்னையில் நடைபெற்ற அக்ரோ நிர்வாகக் கூட்டத்தில் அதன் தலைவர் கா. லியாகத் அலிகான் கலந்து கொண்டார். அன்று மாலை சென்னைராயப்பேட்டை கிரஸெண்ட் மருத்துவமனையின் 36-வது ஆண்டு விழாவில் அமைச்சர்அண்டேவுடன் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினார்.

ஈரோட்டில் பெரியார் மாவட்ட எம். ஜி. ஆர். மன்றப் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். இந்நிகழ்ச்சியில் போக்கு வரத்துறை அமைச்சர் சு.முத்துசாமி, கோவை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச்செயலர் வ. ஜெயராமன், ஈரோடு முத்து மற்றும் கிட்டு, ராதாகிருஷ்ணன், விஸ்வநாதம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

அதை அடுத்து கோவை புறநகர் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயல்வீரர் கூட்டங்களில் கலந்து கொண்டார். பெதப்பம்பட்டி தனலட்சுமி திரையரங்கில் நடந்த செயல் வீரர் கூட்டத்தில் கா. லியாகத்அலிகான் தலைமை தாங்கினார். வ. ஜெயராமன், வேலுச்சாமி ஆகியோர் பேசினார்கள். அன்று மாலை பெதப்பம்பட்டியில்நடந்த பொதுக்கூட்டத்தில் சிறப்புரையாற்றினார்.

சர்க்கார் சாமக்குளத்தில் தேவகி தியேட்டரில் நடந்த ஒன்றிய எம். ஜி. ஆர். மன்ற ஆலோசனைக் கூட்டத்திற்கு கோவை புறநகர் மாவட்ட புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். மன்றத் தலைவரான கா. லியாகத்அலிகான் தலைமை தாங்கினார். கோவை புறநகர் மாவட்ட புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். மன்றச்செயலர் வ. ஜெயராமன் மற்றும் அருண் ஆகியோர் பேசினார்கள்.



டெல்லிக்கு வராதீர்:

## ஆந்திர மந்திரிகட்கு பிரதமர் உத்தரவு

புதுடெல்லி, பிப். 19— ஆந்திர முதலமைச்சர் பதவிக்கு மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர்களிடையே கடும்போட்டி இருந்து வருவது தெரிந்ததே.

இதையடுத்து ஆந்திர மாநில அமைச்சர்கள் மற்றும் எம். எல். ஏக்கள் முக்கியஇந்திராகாங்கிரஸ் தலைவர்கள் ஆகியோர் டெல்லிக்கு வந்தனர்.

இங்குள்ள ஆந்திர மாநில விடுதியான ஆந்திர ஹவுசில் தங்க இடமின்றி பல அமைச்சர்கள் ஆடம்பர ஓட்டல்களில் தங்கியிருந்தனர்.

ஆனால் ஆந்திரஅமைச்சர்களை உடனடியாக திரும்பிச் செல்லுமாறும் முதலமைச்சர் பதவிக்காக யாரும் ஆதரவு தேடக் கூடாது என்றும் பிரதமர் இந்திரா காந்தி உத்தரவிட்டார்.

இதையடுத்து ஆந்திர அமைச்சர்கள் ஐதராபாத்திரும்பினார்கள்.

## அவருக்கு என்ன மறதியோ?

சென்னை, பிப்.19— சட்டப் பேரவையில் தி.மு.க.உறுப்பினர்துரை முருகன் மாற்றுத் தலைவராகசபாநாயகர்இருக்கையில் அமர்ந்து சபை நடவடிக்கைகளை நடத்திக் கொண்டிருந்தார்.

அப்போது தமிழ்நாடு 1982ம் ஆண்டு ஊராட்சிகள் திருத்த சட்ட மசோதா மீது விவாதம் நடந்துகொண்டிருந்தது. மார்க்சிஸ்ட் உறுப்பினர் டி. மணி பேசிக்கொண்டிருந்தார்.

அடுத்து பேசவேண்டியவர் கழக உறுப்பினர் ஆற்காடு சேதுராமன். சேதுராமனின் பெயரைக் கூப்பிடுவதற்குப் பதிலாக துரைமுருகன், ஆற்காடு வீராசாமியின் பெயரைக் கூப்பிட்டார். ஆற்காடு வீராசாமி சட்டசபை உறுப்பினர் அல்ல. அவர் மேல்சபை உறுப்பினராக இருப்பவர்.

சட்டசபை உறுப்பினராக இல்லாத ஒருவரை துரைமுருகன் கூப்பிட்டபோது சபையில் சிரிப்பொலி எழுந்தது. அனைத்து உறுப்பினர்களும் தொடர்ந்து சிறிது நேரம் சிரித்துக் கொண்டிருந்ததைக் கண்ட துரைமுருகன் அப்போது தான் தன்னுடைய தவறை உணர்ந்தவர் போல் சேதுராமனின் பெயரைக் கூப்பிட்டார்.

சபையில் உறுப்பினராக இல்லாத ஒருவரின் பெயரைக் கூப்பிட்டதும், சேதுராமன் பேச எழுந்தவர் மீண்டும் உட்கார்ந்து கொண்டார். ஆற்காடு சேதுராமன் என்று துரைமுருகன் மீண்டும் கூப்பிட சேதுராமன்பேசஆரம்பித்தார்.

## கோடம்பாக்கம் குமார் நிகழ்ச்சிகள்

பிப்ரவரி 20 இராசப்பாளையம், 21 அய்யலூர், 22 பேரையூர், 23, 24, 25 மதுரை மாநகர், 26 அருப்புக்கோட்டை, 27, 28 தூத்துக்குடி.

முகவரி:
**கோடம்பாக்கம் எம். குமார்**
9, சத்தியா தோட்டம்
சாலிகிராமம்
சென்னை—93.

# முதல்வர் புரட்சித்தலைவர் பேச்சு...

(1-ம் பக்க தொடர்ச்சி)

1970-ல் ரூ. 107.50 லட்சத்தில் திட்டப்பட்டது. ஆனால் முடிந்தது 1977-ல். செலவு ரூ. 703.70 லட்சம்.

மதுரையில் பாலாறு திட்டத்திற்கு 256 லட்சத்தில் 1970ல் திட்டம் தீட்டப்பட்டது. ஆனால் 1978ல் வேலை முடியும்போது ஆன செலவு ரூ. 565 லட்சம்.

மருதாநதி திட்டம் 1972ல் ரூ. 99 லட்சத்தில் தீட்டப்பட்டது.

1979ல் அது முடியும்போது செலவு ரூ. 320 லட்சம். சாத்தனூர் அருகில் உள்ள ஒரு திட்டம் 1974ல் ரூ. 202 லட்சத்தில் தீட்டப்பட்டது. 1981 ல் முடியும்போது ரூ. 465லட்சம் செலவானது.

பெரியார் அணையில் வைகை பாசனத்திட்டம் 1974 ல் ரூ.730 லட்சம் மதிப்பீட்டில்தொடங்கியது.

இப்போது மதிப்பிட்டு இருக்கிற தொகை ரூ. 4450 லட்சம். வேலை இன்னும் முடியவில்லை.

இதற்குக் காரணம் என்ன என்பது இருக்கட்டும். ஆனால் இவ்வாறு தாமதம் ஆனதால் ரூ. 2 ஆயிரம் கோடிக்கு மேல் பணம் வீணாகி இருக்கிறது.

ஒரு திட்டத்தை நிறைவேற்றும் போது அதனுடைய எல்லா விவரங்களையும் அறியாமல் விவரம் புரியாமல் அல்ல - விளம்பரத்திற்காக அவசர அவசரமாகத் திட்டத்தைப் போட்டு விடுகிறார்கள். பிறகு தவறுகள் கண்டுபிடிக்கப்பட்டு மறுதிட்டம் வரும்போது செலவும் அதிகமாகிறது. காலமும் ஆகிறது.

போடும் போது ஒழுங்காக யோசித்துப் போட்டு இருந்தால் இவ்வளவு நட்டம் வந்திராது.

நாங்கள் போடுகிற திட்டங்கள் எங்களுக்குப் பின்னால் ஆட்சிக்கு வருகிறவர்களுக்கு கூட சுமையாகஇருந்துவிடக் கூடாது என்று கருதி நல்லமுறையில் சிந்தித்து செயல்படுகிறோம்.

அதற்காக ஒரு திட்டத்தைப்பொறியாளர் தரும்போது முழுவிவரத்துடன் கூடிய-முழுமைத் திட்டமாக தரவேண்டும் என்று கூறி இருக்கிறோம்.

திட்டத்தை நிறைவேற்ற 3 ஆண்டுகள் ஆகுமேயானால் அப்போது ஏற்படுகிற செலவையும் சேர்த்து கணக்கிடும்படி கூறி இருக்கிறோம்.

நாங்கள் அனுபவம் இல்லாதவர்கள் என்றாலும் நாங்கள் இப்படி முழுமையான திட்டத்தை செயல்படுத்த விரும்புகிறோம்.

அனுபவம் உள்ளவர்கள் வீணடித்திருக்கிறார்கள். நம்மிடம் நல்ல நிபுணர்கள்உண்டு.

அவசரமாக திட்டங்களை செயல்படுத்தச்சொல்வதால்தான் 70ல் தொடங்கி 82ல் போய் முடிகிறது.

ஆசிரியர்கள் பிரச்சினை பற்றிக் கூறவேண்டும். ஆசிரியர்கட்கு எதுவும் செய்யவில்லை என்று கூறினார்கள். சில ஆசிரியர்கள் மீதான வழக்குகளை வாபஸ் வாங்கச் சொன்னார்கள், அவர்கள் என்ன போராட்டம் நடத்தினார்கள். என்ன செக்ஷனில் வழக்கு போடப்பட்டுள்ளது என்று பார்க்க வேண்டியுள்ளது.

ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக்குவோம்என்று தேர்தல் நேரத்தில்வாக்குறுதி கொடுத்தோம்.

அதை நிறைவேற்றிவிட்டோம். இதனால் அரசுக்கு எவ்வளவு செலவு ஏற்பட்டது என்பதை நீங்கள் அறிவீர்கள்.

நீங்கள் ஒத்துழைப்பீர்கள் என்ற நம்பிக்கையில் இவைகளையெல்லாம் செய்கிறோம்.

தேர்வுகள் முடிந்த பிறகு ஆசிரியர்கள் போராட்டம் நடத்தியதை நான் பாராட்டி இருக்கிறேன்.

## ஆசிரியர்கள் அதிக ஒத்துழைப்பு தரவேண்டும்

நான் நடிப்புத் துறையில் இருந்தபோது—ஆசிரியர்கள் போராட்டம் நடத்தினார்கள். அந்த சமயத்தில் நான் உதவியதை - தனி மனிதனாக இருந்து கொண்டு செய்தவற்றை இப்போது செய்ய முடியவில்லையென்றால் விதிமுறைகள் சூழ்நிலை தான் காரணம்.

ஆசிரியர்களுக்கு மதிப்பு—மரியாதை தருகிறேன். அவர்கள் இன்னும் அதிக ஒத்துழைப்புத் தரவேண்டும். அவர்கள் நினைத்தால் மாணவர்கள் போராட்டம் நடக்காமல் செய்ய முடியும்.

தஞ்சை மாவட்ட தமிழ் ஆசிரியர் மாநாடு நடந்தது. அங்கே ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டார்கள்.

இந்த அரசுக்கு அதில் பாராட்டுத் தெரிவித்துள்ளனர். உயர் தொடக்கப்பள்ளியில் முதல் நிலை ஊதியத்தில் தமிழாசிரியர்களை நியமித்ததற்காக பாராட்டுவதாகவும் நடு நிலைப்பள்ளியில் தமிழாசிரியர்களை தலைமை ஆசிரியர்களாக நியமிக்க உத்திரவிட்டதற்காகவும் இன்னும் பல்வேறு உத்திரவுகளையும் பாராட்டி அவர்கள் துண்டுப் பிரசுரம் வெளியிட்டிருந்தார்கள்.

இதற்கு முன்பு இவையெல்லாம் செய்யப்படவில்லை என்பதால் இவற்றை நாங்கள் செய்ததை ஒட்டி அவர்கள் பாராட்டியிருக்கிறார்கள்.

(மீனாட்சிசுந்தரம் குறுக்கிட்டு சில கருத்துக்களைக் கேட்டார்).

## மன்னிப்புகடிதம்வாங்கியதுதி.மு.க மரியாதையாக நடத்தியது கழகம்

முதல்வர் தொடர்ந்து:— பரீட்சை முடிந்தபிறகு ஆசிரியர்கள் போராட்டம் நடத்துவதைப்பாராட்டினால் ஒவ்வொரு ஆண்டும் போராட்டம் நடத்துங்கள் என்று அர்த்தம் அல்ல.

போதிய வசதி வந்ததும் அரசு உங்கள் கோரிக்கைகளைக் கவனிக்கும். காலத்தின் கட்டாயம் என்று மீனாட்சிசுந்தரம் சொன்னார்.

போராட்டம் நடத்திக்கைதான ஆசிரியர்களை மன்னிப்புக் கடிதம் வாங்கிக்கொண்டு விடுதலை செய்ததும் காலத்தின் கட்டாயம். போராட்டம் நடத்தும் ஆசிரியர்களை மரியாதை காட்டி விடுவிப்பதும் காலத்தின் கட்டாயம்.

முன்பு ஆசிரியர்களிடம் எழுதி வாங்கப்பட்ட மன்னிப்புக் கடிதங்களை நாங்கள் ஆட்சிக்கு வந்த பிறகு திருப்பித் தந்து இருக்கிறோமே; அதுவும் காலத்தின் கட்டாயம்.

இப்போது மீனாட்சி சுந்தரம் இப்படிக் கூறுவதும் காலத்தின் கட்டாயம்.

உயர்நிலைப்பள்ளித் தணிக்கை குழுவில் தமிழாசிரியர்களை இடம் பெறச்செய்ததையும் பாராட்டி அந்த நோட்டீசில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

வறுமையில் வாடும் ஏழைப் புலவர்கட்கு மாதந்தோறும் ரூ. 150 வழங்குகிறோம்.

முன்பு வழங்கினார்களா? இப்போது நாங்கள் வழங்குகிறோமா?

மீனாட்சிசுந்தரம்: புதிதாகநீங்கள்தான் வழங்குகிறீர்கள்.

முதல்வர்: பாரதிதாசன் பிறந்த நாளில் சிறந்த புலவர்கட்கு ரூ. 10 ஆயிரம் வழங்குகிறோம்.

இயல் இசை நாடகம் வளர்ச்சிபெற இந்தஅரசு ஊக்கம் அளிக்கிறது. நமது தொன்மை வாய்ந்த கலையான நாயன இசைக்கலை வளரும் பொருட்டு நாயனம் பயிலும் மாணவர்கட்கு மாதா மாதம் உதவித்தொகை வழங்கப்படுகிறது. தமிழ் மொழி வளர்ச்சிக்கு பல்வேறு திட்டங்களைக் செயல்படுத்துகிறோம். இத்தனை நல்ல காரியங்களை செய்துதான் ஆசிரியர்களிடமும் மாணவர்களிடமும் இந்த அரசு நல்லபெயர் வாங்குகிறது. இவர்களிடம் நல்ல பெயர்பெறுவது எளிதான காரியம் அல்ல.

(மீனாட்சி சுந்தரம் குறுக்கீடு)

முதல்வர் (தொடர்ந்து):- கறுப்பு கண்ணாடி போட்டுக் கொண்டு பார்த்தால் எல்லாம்கறுப்பாகத் தெரிகிறது. அதேபோல் தான் நமது கண்ணோட்டமும். நாங்கள் எந்தப் பிரச்சினையிலும் அரசியல் ரீதியாக அநாவசியமாக தலையீடு செய்வதில்லை.

மீனாட்சிசுந்தரம் ஆசிரியர் சங்கத்தில் இருக்கிறாரா? அரசியல்வாதியாக இருக்கிறாரா?

மீனாட்சிசுந்தரம்:- நான் ஆசிரியர் சங்கத்தைச் சேர்ந்தவனாகவே இருக்கிறேன்.

## பழி வாங்குவது எனக்கு பழக்கமில்லாதது

முதல்வர்:- நேரு பிரதமராக பதவி ஏற்றபோது மக்களின் கடைசித் தொண்டன் என்று கருதி எனக்கு இந்தப் பதவியைத் தந்துள்ளனர் எனக் கூறினார். அண்ணா பதவி ஏற்கும்போது மக்கள் சேவகனான எனக்கு இந்தப் பொறுப்பைத் தந்திருக்கிறார்கள். அவர்கள் நம்பிக்கைக்கு ஏற்றபடி பணி செய்வேன் என்றார். அவர்கள் அளவுக்கு எனக்குத் தகுதியில்லை என்றாலும் அவர்களின் கொள்கைப்படி நடக்கும் நான் கட்சி நலனுக்காக எதையும் செய்வதில்லை. அப்படிப்பணியாற்றவும் முடியாது, அப்படி நான் பணியாற்றியிருந்தால் உங்களின் பாராட்டுக்களையும் பெற்றிருக்க முடியாது, இவ்வளவு காரியங்கள் செய்கிற இந்த அமைச்சரவை, தமிழர் அமைச்சரவை மட்டுமல்ல; தமிழின் அமைச்சரவையாகும். பழிவாங்குவது, காரணம் தேடி அலைவது எனக்குப் பழக்கமில்லாதது. காரணம் தேடி அலைவதானால் தினம் தினம் காரணங்கள் கிடைக்காதா?

ஊனமுற்றவர்களுக்காக 1980-81-ல் ரூ 31.86 லட்சம் செலவு செய்தோம். 1981-82-ல் ஊனமுற்றோருக்காக ரூ.37.61 லட்சம் செலவு செய்தோம். ஊனமுற்றவர்களுக்கு கல்வி, மற்றும் தொழில் பயிற்சி வழங்குகிறோம்,

ஊனமுற்றவர்களுக்காக 1974-75-ல் 516 மூன்று சக்கர வண்டிகள் வழங்கப்பட்டன. 1975-76-ல் 1,074 வண்டிகளும் 1976-77-ல் 1400 வண்டிகளும் வழங்கப்பட்டன.

சென்ற ஆண்டில் ஆயிரம் வண்டிகள் வழங்கப்பட்டன.

மந்தாகிருஷ்ணமூர்த்தி பேசும்போது, பெண்களுக்கான பல்கலைக் கழகத்துக்கு பெண்ணையே துணைவேந்தராக நியமிக்கவேண்டும் எனக்கேட்டுக் கொண்டார்.

நிதி நிலை அறிக்கையில், குழந்தைகள் நலத் திட்டம் பற்றிய அறிக்கை வரும். துணைவேந்தர் பதவி பெண்ணுக்கே நிச்சயமாக வழங்கப்படும்.

அங்கே 100-க்கு 99 பேர் அல்லது 100-க்கு 100 பேரும் பெண்கள்தான் நியமிக்கப்படுவார்கள்.

## காமராஜர் தொடங்கியதை கழக அரசு தொடர்கிறது

தொழில் செய்ய முடியாத 60 வயதான ஏழை விவசாயிகளுக்கு மாதம் 100 ரூபாய் உதவித்தொகை வழங்குவோம் என தேர்தல் அறிக்கையில் கூறியிருந்தோம். இந்தத் திட்டத்தை சென்ற ஆண்டு முதல் செயல்படுத்தி வருகிறோம். 60 வயதான 30,000 பேருக்கு உதவித்தொகை வழங்க அரசு ஆணையிட்டுள்ளது. இதுதவிர வேட்டி, சேலை வழங்குகிறோம். வயது முதிர்ந்தவர்களுக்கு மாதம் 20 ரூபாய் தரும் திட்டம் பெருந்தலைவர் காமராஜர் தொடங்கியதாகும்.

நாங்கள் 5 ரூபாய் சேர்த்து 25 ரூபாயாக கொடுக்கிறோம். வேட்டி சேலையும் கொடுக்கிறோம். வாரம் ஒரு கிலோ அரிசி வழங்குகிறோம். இதற்கு ரூ. 98.40 லட்சம் செலவாகிறது. ஆசிரியர்களுக்கு வீட்டு வசதி வாரியம், தனியார் பள்ளி ஆசிரியர்களுக்கு நேரிடையாக சம்பளம் வழங்குதல் போன்றவை தக்க சமயத்தில் நிறைவேற்றப்படும். சென்னை துரித போக்குவரத்து திட்டம் பற்றி திட்டக் குழு பரிசீலித்து மத்திய அரசுக்கு அனுப்பியுள்ளது.

பஞ்சாயத்துத் தேர்தலைப் பொறுத்தவரை நாங்கள் நல்ல நோக்கத்துடன் சட்டம் கொண்டு வந்தோம். தேர்தலில் நிற்பதற்காக சில ஆசிரியர்கள் கூட வேலையை ராஜினாமா செய்து விட்டு வந்தார்கள். விரைவில் கோர்ட்டுக்குச் சென்று தேர்தலை துரிதமாக நடத்துவதே எங்கள்நோக்கம்.

மாநகராட்சி பற்றி இங்கே குறை சொன்னார்கள். அதன் வருமானத்தை உயர்த்தினால்தான் நல்ல திட்டங்களை நிறைவேற்ற முடியும். சட்டம் ஒழுங்கைக் காப்பாற்ற சமூக விரோதிகளின் செயலைத் தடுக்க, சட்டப்படி- நியாயப்படி அரசு நடவடிக்கை எடுக்கும்.

18 வயதுக்கு மேல் உள்ளவர்களுக்கு வேலை வாய்ப்பு வழங்கும் திட்டத்தை நிறைவேற்றி வருகிறோம். ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தில் அவர்கள் பதிவு செய்து கொண்டால் 30 நாளில் வேலை வாய்ப்பு வழங்கப்படும். அப்படி வேலை கிடைக்காவிட்டால் 1 ரூபாய் மதிப்புள்ள அரிசி தினமும் வழங்கப்படும். 1—9—81 முதல் 31—12—81 வரை 4 லட்சத்து 55 ஆயிரம் பேர் வேலை கேட்டு பதிவு செய்தனர். அவர்களில் 3 லட்சத்து 37 ஆயிரம் பேருக்கு வேலை வழங்கப்பட்டது. மற்றவர்கள் தாங்களாவே விலகிக் கொண்டனர். அவர்களுக்கு தேசிய ஊரக வேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் வேலை வழங்கப்பட்டது. தினசரி 7 ரூபாய் மதிப்புக்கு அரிசியோ அல்லது பணமோ அல்லது இரண்டும் சேர்த்தோ வழங்கப்படுகிறது.

வேலை வாய்ப்பில்லாத இளைஞர்கள் ஒவ்வொருவருக்கும் மாதம் 50 ரூபாய் உதவிப் பணம் வழங்கும் திட்டத்தை நிறைவேற்றுகிறோம். இதன் மூலம் ஆண்டுக்கு 6 கோடி ரூபாய் செலவாகிறது. செகண்டரி கிரேடு பயிற்சி பெற்று வேலையில்லாமல் இருப்பவர்களுக்கும் உதவி அளிக்கப்படுகிறது.

பட்டதாரிகள் 15-1-82 வரை 11 ஆயிரத்து 811 பேர் உதவி பெறுகிறார்கள். அவர்களுக்குச் செலவு 80-81ல் 25லட்சத்து 43 ஆயிரம், 1982-83ல் ரூ. 43 லட்சம் செலவாகும்.

ஏழைத்தாய்மார்கள் குழந்தை பேறு காலத்தில் ரூ. 50 வீதம் 3 மாதத்துக்கு மொத்தம் ரூ 150 வழங்கப்படுகிறது. இது தவிர சத்துணவு கிடைப்பதற்கான திட்டத்தையும் நிறைவேற்றுகிறோம்.

அநாதையாக பட்டினி கிடக்கும் நிலையில் உள்ள 155 பேருக்கு நூறு ரூபாய் உதவித்தொகை கொடுக்கிறோம்.

அநாதைகள் முதியோர்கள் ஆகிய 2 லட்சம் பேருக்கு வாரம் 1கிலோ அரிசி இலவசமாக வழங்கப்படுகிறது.

சட்டம் ஒழுங்கு நல்ல முறையில் இருந்தால் தான் திட்டங்களைச் செயல்படுத்தமுடியும்.

அண்ணாவின் கொள்கைகளை நாங்கள் நிறைவேற்றி வருகிறோம். சட்டம் ஒழுங்கைக் காக்க ஒத்துழைக்க வேண்டிய சிலர் சட்டத்தைக் கையில் எடுத்துக் கொள்வது வேதனை அளிக்கிறது.

தான் சொல்வது தான் சரி. அதைத் தான் செய்ய வேண்டும் என்று கூறுகிறார்கள்.

ஒரு கதை சொல்வார்கள். யார் யார் எல்லாமோ சொன்னவற்றைக் கேட்டு ஒரு தகப்பனும், மகனும் கழுதையைக் கட்டி சுமந்ததாக கதை சொல்வார்கள்.

அப்படி எதை எவர் சொன்னாலும் கேட்டுக் கொண்டே இருந்தால் காரியங்கள் நடக்காது. நாங்கள் அண்ணாவின் கொள்கைகளை மனச்சாட்சி படி நிறைவேற்றுகிறோம்.

நாடோடி மன்னனில் ஒரு வசனம் வரும். "நீங்கள் மாளிகையிலிருந்து மக்களைப் பார்க்கிறீர்கள். நான் மக்களுடன் இருந்து மாளிகையைப் பார்க்கிறேன்."—இந்தக் கொள்கையைத் தான் அண்ணாவும் சொன்னார். மக்களை நேசியுங்கள். மக்களுக்காகப் பாடுபடுங்கள். அவர்களை நேசியுங்கள் என்று கூறினார்.

(அந்த ஆங்கிலப் பொன்மொழிகளை சபையில் முதல்வர் கூறினார்.)

அப்படிப்பட்ட பொன்மொழிகள் அடங்கிய அண்ணா கைப்பட எழுதிய பொன்மொழிகளையும் அண்ணா படத்தோடு சேர்த்து எதிர்க்கட்சித் தலைவருக்கு வழங்குகிறேன்.

(அண்ணா உருவத்துடன் அண்ணாவின் பொன்மொழிகள் அடங்கிய பிரேம்போட்ட படத்தை சங்கரலிங்கத்துக்கு முதல்வர் வழங்கினார். அதை அவர் பெற்றுக்கொண்டார்).

(சங்கரலிங்கம் குறுக்கீடு)!

முதல்வர்(தொடர்ந்து):- நான் நேற்றையதினம் பேசும்போது என்னைக் கொலை செய்ய பணம் கொடுத்தவர்கள் யார் என்று பெயரைக் குறிப்பிடவில்லை. ஆனால் எதிரொலிப் பத்திரிகையில் 'கலைஞரைக் கொல்ல எம்.ஜி.ஆர். சதி' என்று செய்தி வெளியிட்டிருக்கிறார்கள். யாருக்கும் தொல்லை வருவதற்காக நான் சொல்லவில்லை.

அடுத்தவர்களுக்கு துன்பம் வருவதை என்னால் ஏற்க முடியாது. இந்திராகாந்தி மதுரைக்கு வந்த போது நடந்த நிகழ்ச்சிகள் நமக்குத் தெரியும். மீண்டும் கலைஞர் மதுரை போன போது அவர் போலீஸ் பந்தோபஸ்துடன்தான் போக வேண்டும் என்று கூறினேன்,

அங்கே அவர் சிறப்புக்கூட்டத்தில் பேசும்போது கீற்றுக்கொட்டகை இருந்தால் போதிய தீயணைப்பு என்ஜின்கள் நிறுத்தப்பட வேண்டும் என்று கூறினேன்.

கலைஞர் பேசும்போது போலீசார் பாதுகாப்புக்குச் செல்லவேண்டும்என்று உத்தரவிட்டவன் தான் இந்த ராமச்சந்திரன்.

என்னைக் கொல்ல பணம் கொடுத்தவர்கள் யார் என்று தெரியவில்லை. விசாரணை நடந்து வருகிறது. பின்னர் விவரங்கள் வெளிவரும்.

இவ்வாறு முதல்வர் பேசினார்.

முதல்வரின் பதிலுக்கு பின்னர் கவர்னர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## தமிழ் பல்கலைக்கழக சட்ட மசோதா நிறைவேற்றம்

சென்னை, பிப். 19— 1982ம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக் கழக சட்ட மசோதா தமிழ்நாடு 1982ம் ஆண்டு கடன் நிவாரண (திருத்த) சட்ட மசோதா ஆகியவை சட்டப் பேரவையில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. பல்கலைக்கழகம் பற்றிய மசோதா மீதான விவாதத்துக்கு கல்வியமைச்சர் அரங்கநாயகம் பதிலளித்தார்.

கடன் நிவாரண சட்ட மசோதா மீதான விவாதத்துக்கு கூட்டுறவு-சட்ட அமைச்சர் பொன்னையன் பதிலளித்தார்.

அமைச்சர்களின் பதில்களைத் தொடர்ந்து 2 மசோதாக்களும் சட்டமாக குரல் ஓட்டு மூலம் நிறைவேற்றப்பட்டன.



Published by K Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras 600 029

Editor: E. PARASURAMAN

சிறு தேயிலை விவசாயிகள்:

# குறைந்த விலையில் உரம் வாங்க ரூ. 5 லட்சம் மான்யம்

சென்னை, பிப். 19- சிறு தேயிலை விவசாயிகள் குறைந்த விலையில் உரம் வாங்குவதற்கு கழக அரசு இந்த ஆண்டு 5 லட்சம் ரூபாய் மான்யமாக வழங்கியிருப்பதாக ஊரக தொழில் அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

நீலகிரி மாவட்டத்தில் கூட்டுறவுத் தேயிலைத் தொழிற்சாலைகள் மற்றும் தேயிலை விவசாயிகள் பாதிக்கப்பட்டிருப்பது பற்றிய கவன ஈர்ப்பு தீர்மானம் ஒன்றுக்கு சட்டசபையில் விளக்கம் அளித்து ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே. கூறியதாவது:-

நீலகிரி மாவட்டத்தில் 13 தொழில் கூட்டுறவு தேயிலைத் தொழிற்சாலைகள் உள்ளன. சுமார் 10 ஆயிரம் சிறு தேயிலை விவசாயிகள் உள்ளனர்.

மத்திய அரசு 9-4-77 முதல் விதித்த ஏற்றுமதி வரி எரிபொருள், உரம் அலுமினியம் பாயில் ஆகியவற்றின் விலை ஏற்றம்முதலியவைகளால் உற்பத்திக்கான செலவு அதிகரித்தது.

தற்போது பச்சைத் தேயிலைக்குவழங்கப்படும் விலை. தேயிலைஏலத்தில் பெறப்படும் விலையைக் காட்டிலும் அதிகமாகவே இருக்கிறது. சிறுதேயிலை உற்பத்தியாளர் பயன் பெற வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில்தான் இந்த அதிகவிலைகொடுக்கப்படுகிறது.

## ஆயத்தீர்வை குறைப்பு

மத்தியஅரசு கூடலூரில் அல்லாத மற்ற தொழிற் கூட்டுறவுத் தேயிலைத் தொழிற் சாலைகளுக்கு ஆயத்தீர்வையை ரூ. 1.10-ல் இருந்து 60 காசாகவும், கூடலூரில் உள்ள தொழிற்சாலைகளுக்கு 40 காசிலிருந்து 36 காசாகவும் குறைத்து உத்தரவு பிறப்பித்துள்ளது.

தவிர தமிழக அரசு கோவைமற்றும் கூடலூர் ஏல மையங்களில் விற்பனை வரியையும் 5 சதவீதத்திலிருந்து இரண்டரை சதவீதமாக குறைத்துள்ளது, மேலும் மலைப்பரப்பு அபிவிருத்தி திட்டத்தின் கீழ் சிறு விவசாயிகளுக்கு குறைந்த விலையில் உரங்களை வழங்க 5 லட்சம்ரூபாயை கழக அரசு மான்யமாக வழங்கியுள்ளது. இந்திய தேயிலை வாரியமும் 25 சதவிகிதம் உரமானியமாக வழங்க முன்வந்துள்ளது.



இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. தெரிவித்தார்.

கற்பழிப்பு முயற்சி:

# வாலிபரை கொன்ற இளம்பெண்

அமிர்தசரஸ், பிப்.19— இளம் பெண்ணைக் கற்பழிக்க முயன்ற வாலிபரை, அந்தப் பெண்ணே கொலை செய்தாள்.

அமிர்தசரசிற்கு யாத்திரையாக வந்த இளம் பெண்ணை தங்கக்கோவில் அருகே, ஒரு வாலிபர் கற்பழிக்க முயற்சி செய்தாராம். இதையடுத்து அப்பெண் அந்த வாலிபரைக் கத்தியால் குத்தியதாகக் கூறப்படுகிறது.

இதில் அந்த வாலிபர் கொலை செய்யப்பட்டார்.

போலீசார் இதுகுறித்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

கடலூரில் முன்னாள்

# ராணுவ வீரர்களுக்கு ரூ.12லட்சம்செலவில் 'ஜவான் இல்லம்'

## டாக்டர் நாவலர் அறிவிப்பு

சென்னை,பிப்.19-முன்னாள்ராணுவ வீரர்களுக்கும் அவர்களது குடும்பத்தினருக்கும் பயன் படத்தக்க வகையில் ரூபாய் 12 லட்சம் செலவில் தென்ஆற்காடு மாவட்டம் கடலூரில் ''ஜவான் இல்லம்'' என்ற பெயரில் கட்டிடங்கள் கட்ட தமிழக அரசு திட்டமிட்டுள்ளது என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தெரிவித்தார்.

முன்னாள் ராணுவத்தினரின் நலன் பற்றிய கேள்வி ஒன்றுக்கு சட்டமேலவையில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பதில் அளித்துப் பேசுகையில் கூறியதாவது:

முன்னாள் ராணுவத்தினருக்குத் தமிழக அரசு பல்வேறு வகைகளில் பயன் தரத் தக்க திட்டங்களை செயல்படுத்தி வருகிறது. ''ஜவான் இல்லம்'' என்ற பெயரில் சேலம், திருச்சி, தஞ்சை, கோவை, வேலூர் முதலிய இடங்களில் கட்டிடங்களைக் கட்டி தங்குமிடம் வங்கி கடைகள், உணவு விடுதி ஆகியவைகளை அமைத்திருக்கிறது.

இதன் மூலம்கிடைக்கும் வருமானத்தை முன்னாள் ராணுவத்தினரின் நலன்களுக்காக பயன்படுத்துகிறது.

தென் ஆற்காடு மாவட்டம் கடலூரில் 40 ஆயிரத்து 110 ரூபாய் கொடுத்து 80 ஆயிரத்து 222 சதுர அடி நிலத்தை அரசு வாங்கியிருக்கிறது. இந்த நிலத்தில் 12லட்சம் ரூபாய் செலவில் ''ஜவான் இல்லம்'' (ராணுவ வீரர் மாளிகை) என்ற பெயரில் கட்டிடங்களை கட்டவிருக்கிறது. இந்தக் கட்டிடத்தில் 15 சிறு கடைகள், வங்கி, முன்னாள் ராணுவத்திற்கான தங்குமிடம் ஆகியவை கட்டப்படும். இதற்காக அரிமா சங்கமும் ரூ. 1 லட்சம் நன்கொடை அளிக்கமுன் வந்துள்ளது. இதுவரை அரிமா சங்கம் 81 ஆயிரம் ரூபாய்கொடுத்திருக்கிறது

தவிர அரசு பரிசுச்சீட்டு குலுக்கலில்—ஒரு குலுக்கல்தொகையும்முன்னாள் ராணுவத்தினரின் நல நிதிக்குக் கொடுக்கப்படுகிறது. ஆண்டுதோறும் டிசம்பர் 7-ம்தேதி நடக்கும் கொடிநாள் மூலம் சுமார் 3 லட்சம் ரூபாய் அளிக்கப்படுகிறது.



# கக்கன்மனைவிக்கு உதவிதொகை: கழக அரசின் சார்பில் ஆணை

சென்னை, பிப். 19— தன்னலமற்ற தொண்டர் — முன்னாள் அமைச்சர் அமரர் கக்கனின் துணைவியாருக்கு உதவித் தொகை மற்றும் சலுகைகளை வழங்க அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

பொதுவாழ்வில்எடுத்து காட்டாக விளங்கிய முன்னாள் அமைச்சர் கக்கனுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அரசு மாதம் ரூ. 500ம் மற்றும் பல சலுகைகளையும் அளித்து வந்தது.

கக்கன் மறைந்தபோது அவருக்கு அளிக்கப்பட்டு வந்த இந்த உதவித் தொகையும்சலுகைகளும் திருமதிகக்கனுக்கும்வழங்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

முதல்வர் அறிவித்ததை அமல்படுத்தும் வகையில் அரசு அதற்கான ஆணையைப் பிறப்பித்துள்ளது.

அதன்படி திருமதி சொர்ணம் பார்வதி கக்கனுக்கு மாதாந்திர ஓய்வூதியமாக ரூ. 500 ஐ அரசு வழங்கும்.

வாடகையின்றி குடியிருப்பும், அமைச்சர் தரத்தில் அரசு மருத்துவ மனைகளில் இலவச சிகிச்சையும் அரசுப் பேருந்துகளில் மாநில முழுமைக்கும் கட்டணம் இன்றி பயண வசதி சலுகைகளும் பார்வதி கக்கனுக்கும் அளிக்கப்படும்.

இதற்கான ஆணையை அரசு வெளியிட்டுள்ளது.

மக்கள் குறைகளை கேட்டறிந்தார்:

# பெரியமேடு பகுதியில் அமைச்சர் குழந்தைவேலு

சென்னை பிப். 19— மக்கள் குறைகளை நேரில் கேட்டு அறியும் திட்டத்தின் கீழ் 63—வது வட்டம் பெரியமேடு பகுதிக்கு அமைச்சர்குழந்தைவேலு சென்றார்.

பெரியமேடு பகுதியில் சுகாதாரக் கேடுகளை உண்டாக்குபவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்கப்படும்என்று அப்போது அவர் கூறினார்.

பேச்சாளர் முகவரி

என். மதன் என்ற கல்யாணி

எல்லைத் தெரு,

கூடலூர்

மதுரை மாவட்டம்